உள்ளின் - நினைத்தால் 799; அகத்து 1126; நினைப்பின் 1201, 1207.

உள்ளுக - நினைக்க 539.

உள்ளும் - நினைந்திருக்கும் 1298.

உள்ளுவது - நினைப்பது 596.

உள்ளுவர் - நினைப்பர் 107.

உள்ளுவன் - நினைப்பேன் 1125; (அவர் சொற்களை) நினைப்பேன் 1184.

உள்ளுவேன் - நினைப்பேன் 1136.

உள்ளுள்ளே - உள்ளத்துள்ளே ; உள்ளுந்தோறும் உள்ளும் தோறும் (காளி) 1057.

உற - அடைதலால் 399 ; வரக்கூடியவற்றை 535; மிக 659.

உறங்கி - தூங்கி - 339

உறங்குவது - தூக்கம் வருவது 339.

உறல் - அடைதல் 378 ; உறவு 885.

உறல்முறையான் - உறவு முறைத் தன்மையோடு, சுற்றத்தாரோடு 885.

உறவு - படுதல், கொள்ளுதல் 510.

உறற்பால - வரக்கூடியன 378.

உறுஅ - அடையாவகை ; உறுமல் என்பது கடைக் குறைந்து நின்றது 1052.

உறுஅதவர் - அயலவர், பழகாதவர் 1096; (என்னை) விரும்பாதவர் 1245 ; அன்புடையவராகாதவர் 1292.

உறுஅதோ - பெறத்தக்க ஒன்றோ ; பெறுதற்கு அரியது 1143.

உறுஅமை - வராதபடி 442.

## ஊ

எ

எச்சம் - எஞ்சி நிற்பது 238; ஒழிந்து நிற்பது 674, 1004; ஒழிந்தவை 1012; அஃதொழிந்தது 1075; மக்கட்பேறு 114.

எச்சத்தால் - மக்களால் 114.

எச்சத்திற்கு - வழியிலுள்ளார்க்கு 112.

எஞ்சல் - அற்றுப்போதல் 44.

எஞ்சாது - ஒழியாமல் 690.

எஞ்சாமை - ஒழியாமல்; குறையாமல் 497.

எஞ்ஞான்று - எப்போது 44, 145, 317, 361, 439, 582, 635, 697, 701, 864, 870, 886, 903, 905, 910, 921, 926, 927.

எடுக்கும் - எழுப்பும் 1150.

எடுத்து - எடுத்து எண்ணி 776.

எடுப்பதூஉம் - உண்டாக்குவதும், வாழவைப்பதும் 15.

எட்பகவு - எட்பிளவு 889.

எண் - எட்டு 9; கணக்கு; கணிதம் 392; அரிய; அறிதற்கரிய 424; எளிய 548, 760: எண்ணம் 910; எளிய 991.

எண்குணத்தான் - எட்டுக் குணங்களுடைய கடவுள் 9.

எண் சேர்ந்தநெஞ்சத்து - ஆலோசனை செய்யும் மனமும் 910.

எண்ண - மதிக்க 922.

எண்ணப்படுவது - கொள்ளப்படுவது 438.

எண்ணம் - எண்ணியிருந்த வெற்றியை 494.

எண்ணுத - ஆராயாத, ஆலோசனை செய்யாத 568.

எண்ணுது - விசாரியாது (பின்விளைவதை நினையாது) 180.

எய்துபிழைத்தது - எய்து இலக்குத் தவறிய 772.

எய்தும் - (மறுமையில்) அடையும் 75; அடைவான் 145; பெறும் 309, 610; அடையும் 1024.

எய்துவர் - பெறுவர் 137.

எய்யாமை - (மெய்) வருந்தாமை, முயலாமையில் 296,

எரி - நெருப்பு 308, 435, 1148.

எரியால் - நெருப்பால் 896.

எரு - உரம்; ஆடுமாடுகளின் எரு 1037, 1038, 1147.

எலிப்பகை - எலியாகிய பகை 763.

எல்லா - அனைத்து 260, 296, 299, 361, 457, 746, 851, 972.

எல்லாஅம் - எல்லாம் 375.

எல்லாம் - அனைத்தும்—1, 15, 29...........

எல்லாரும் - அனைவரும் 191, 742, 1139, 1311.

எல்லார்க்கும் - அனைவருக்கும் 582.

எல்லைக்கண் - எல்லையோடு, எல்லைக்குள் 806.

எவன் - யாது (உளது) 31; யாது 46; 57; யாது (பயனை) 79; யாது பயனைக்கருதி 99, 237; என்ன பயனை 272; என்றும் 345; யாது கருதி 379; யாது 574; என்ன பயனை 803; என்ன பயனுடையது 1089; என்ன செய்வரோ 1165; என்கருதி 1171; எதற்காக 1172; என்ன இன்பத்தை 1195; யாது 1207, 1291; என்ன 1308.

எவ்வ - துன்பந்தரும் 853; ஒன்றாலும் தீராத 1241.

எவ்வது - எப்படி 426.

எளியன் - அணுகுதற்கு எளிமையுடையவன்; 'எளிமையாவது பேரத் தாணிக்கண் அந்தணர் சான்றோர் உள்ளிட்டாரோடு செவ்வியுடையனாயிருத்தல்' 863.

எள் - எள்ளின் விதை 889.

எள்ளப்படும் - இகழப்படுவான் 191.

எள்ளற்க - இகழாதொழிக; இகழ்தல்—அற்பமாகநினைத்தல், 491.

எள்ளாத - இகழாத 470.

எள்ளாது - இழிவு சொல்லாது 1057.

எள்ளாமை - இகழப்படாமை 281; இகழாமை 667.

எள்ளின் - இகழின் (வாயில் மறுக்கின்) 1298.

எள்ளும் - இகழ்ந்து கூறும் 607.

எள்ளுவாரை - இகழும் பகைவரை 829.

எள்ளுவர் - இகழ்வர் 752.

எறிக - செய்க, தண்டிக்க 562.

எறிதற்கு - வெட்டுவதற்கு 821.

எறிந்தும் - (ஒருமுகமாகப்) போர் செய்தும் 747.

எறிய - வீச 775.

எற்று - நீங்காத 663.

எற்றிற்கு - எதற்கு 1080.

எற்று - யாது செய்தோம் 275; எத்தன்மையது 557, 655, 1256.

எற்றுள் - எல்லாவற்றுள்ளும் 438.

என - என்றுசொல்ல 55, 69; என்று சொல்லப்பட்ட 168; என்று 316; என்பது 334; என்று 630, 700; என்று சொல்ல 722;

என்பர் - என்று கூறுவர் 246, 662, 1220.

என்பவர் என்று கூறப்படுபவர் 393.

என்பவன் - செய்கின்றவனது; கருதுகின்றவனும் 856.

என்பவன் வாழ்க்கை - என்பவனும் வாழ்க்கையும் (மண) 85.

என்பார் - என்று சொல்லுபவர் 275; என்று சொல்லப்படுகின்றவர் 365; 710; 956, 1188, 1209.

என்பார்க்கு - என்று சொல்லப்படுவர்க்கு 1036.

என்பான் - என்று சொல்லப்படுவான் 41, 42, 47, 147; நன்கு மதிக்கப்படுவான்; சொல்லப்படுவான் 281; தெளிந்திருப்பான்; கொள்ளுகின்றவன் 628; சொல்லுபவன் 850.

என்பு - எலும்பு, உடல் 72, 77, 80.

என்புஇல்அதனை - எலும்பில்லாத உயிரை 77.

என்போர் - என்று சொல்லப்படுபவர் 30.

என்ற - என்று சொல்லப்பட்ட 584.

என்றது - என்று சொன்னது 552.

என்றல் - (உலகத்தாரால்) சொல்லப்படுதல் 181.

என்றவர் - என்று கூறியவர் 1154.

என்றவற்றுள் - என்று சிறப்பித்துச் சொல்லப்பட்டவற்றுள் 715.

என்றார் - என்று சொன்னவர் 1149.

என்று - என்றவாறு, என்பதாக 11; சொல்லப்பட்ட 27; என்று கருதி 174, 205, என்று சொல்லும்படி; என்றுகொண்டு 307, 331, 351; என்பதாக 388......

ஏ

ஏமார்த்தல் - ஏமம் ஆர்த்தல்; பாதுகாப்புச் செய்தல் 660.

ஏமுற்றவரினும் - பித்துற்றவரினும்; ஏமுறல்-மயங்கல் 873.

ஏரினும் - உழுதலினும் 1038.

ஏர் - கலப்பை 872, 1031; ஒத்த 1089; நன்மைக் குறிப்பாய ஆகு பெயர் 1098; அழகு 1305.

ஏர்பின்னது - (முடிவில் உணவு வேண்டி) ஏர் உடையவர் வழியதாயிற்று 1031.

ஏல் - ஆயின் 18, 368, 386, 556, 573. 575, 996, 1014, 1118, 1144.

ஏவவும் - (பிறர்) சொல்லவும் 848.

ஏவல் - கட்டளையிடுதல் 515; ஏவிய தொழில் 907, 909.

ஏழை - அறிவிலான் 873.

ஏறா - ஊராத 1137.

ஏறி - மேலே சென்று 758.

ஏறினர் - ஏறிநின்றவர் 476.

ஏறு - இடபம்; சிங்க ஏறு 59; ஏறுபோல்வான் உயர்திணைப்பொருளில் வந்த அஃறிணைச் சொல் 381.

ஏறும் - ஏறிச்செல்லும் 1132, 1264; ஊருகின்ற 1133.

ஏற்றல் - போர் செய்தல் 861.

ஏற்று - கேட்டு 716.

ஏனும் - ஆயினும் 277, 430, 997.

ஏனை - மற்ற 505; எல்லா 514; மற்ற 704; 760.

ஏனை இரண்டும் - அறமும் இன்பமும் 760.

ஏனைய - மற்ற 268.

ஏனையவர் - (மற்றவர்) கல்லாதவர் 410.

## ஐ

ஐ - ஐந்து 354; சந்தேகம் 510; தலைவன் (அரசன்) 771.

ஐந்தன் - ஐம்பொறிகட்குரியவாய 343.

ஐந்தன் புலத்தை - ஐம்பொறிகளுக்கு முரிய புலன்களை 343.

ஐந்தின் - ஐந்தனது 27.

ஐந்து - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து ஆசைகளையும்; (பொறிகளாகிய யானை) ஐந்து 24; புலன்களிற் செல்கின்ற அவா ஐந்து 25; ஐம்பொறிகள் 126; ஐந்து 271, 675, 738, 939, 983.

ஐந்துடன் - ஐந்தோடு 632.

ஐம் - ஐந்தாகிய 43, 1101.

ஐம்புலத்து ஆறு - ஐந்து இடத்து செய்யும் அற நெறியை 43.

ஐயத்தின் - ஐயத்தினின்றும் 353.

ஐயப்படாஅது - சந்தேகப்படாமல் 702.

ஐயப்படும் - (உலகம்) சந்தேகப்படும் 958.

ஐயப்பாடு - சந்தேகம் 587.

ஐயம் - சந்தேகம்; மயக்கம் 353, 845.

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் - ஐம்புலனுலறியக் கூடியவற்றை அறிந்திருந்தாலும்; புலன்களைத் தன்வயப்படுத்தி விட்டாலும் 354.

ஐயுறவு - சந்தேகம் 510.

ஒ

ஒக்க - ஒத்திருப்பதாக 490.

ஒக்கல் - சுற்றம், சுற்றத்தார் 43.

ஒக்கின் - ஒத்திருந்தால் 1100.

ஒக்கும் - போன்றிருக்கும், நிகர்க்கும் 972, 1112.

ஒடு - உடன் 18......

ஒடுக்கம் - (சமயம் பார்த்து) ஒய்ந்திருத்தல் ; ஒடுங்கியிருத்தல் 486.

ஒடுங்கும் - மறைந்திருக்கும் 828.

ஒட்ட - பொருந்த 140, 482.

ஒட்டல் - தாக்குதல், கிட்டுதல் 499.

ஒட்டாரை - பகைவரை 679.

ஒட்டார் - பகைவர் 826; இணக்க மில்லாதவர் 967.

ஒட்டி - நட்பாகி 679.

ஒட்டிக்கொளல் - நட்பாக்கிக் கொளல் 679.

ஒட்பம் - அறிவு 404, 425.

ஒண் - முறையின்வரும் 760; விளங்கும் 1009, 1088, 1101, 1240.

ஒண்டொடி - விளங்கும் வளையலணிந்தவள் 1101.

ஒண்ணுதல் - ஒளிபொருந்திய நெற்றி 1240.

ஒண்பொருள் - நெறியான் வரும் பொருள் 760, 1009.

ஒண்மை - விளக்கமாகிய அறிவு 844.

ஒத்தது - உலக நடை 214.

ஒத்தல் - நிகர்த்தல் 993.

ஒத்தாங்கு - ஒப்ப, பொருந்துமாறு, ஏற்றவாறு 561.

ஒத்தி - ஒத்திருக்க விரும்பினையானால் 1119.

**ஒப்ப** - போல 702.

**ஒப்பதாம்** - பொருந்துவதாகிய 993.

**ஒப்பது** - போல்வது 162, 363, 536, 621; பொருந்துவது 993.

**ஒப்பர்** - சமமாவர் 413, 730.

**ஒப்பன்று** - ஒத்தவராகார் 993.

**ஒப்பாரி** - ஒப்பு 1071.

**ஒப்பிலார்** - ஒப்பில்லாதவர்; மாறனவர் 800, 812.

**ஒப்பு** - ஒத்திருத்தல் 993.

**ஒப்புரவாண்மை** - உபகாரம் செய்தல் 480.

**ஒப்புரவில்** - கொடுப்பதில், உபகாரஞ் செய்வதில் 218.

**ஒப்புரவின்** - ஒப்புரவு போன்ற 213.

**ஒப்புரவு** - உலக நடை, உபகாரஞ் செய்தல் 983.

**ஓரார்** - நீங்கார் 658.

**ஓரால்** - நீங்குதல் 153; செய்யாமை 662.

**ஓரீஇ** - நீங்கி; ஒருவி, ஒரிஇ என விகாரப்பட்டு நின்றது 116; நீங்க; நீங்கி 422, 797, 830; ஒழித்து 1009.

**ஒரு** - ஒப்பிலாத 168; சிறு 337; தெளிய 357.

**ஒருகால்** - ஒரு காலத்தில் 248.

**ஒருங்கு** - ஒருசேர 343, 554, 610; முழுவதும் 733; ஒருசேர 760, 951, 1056.

**ஒருங்கே** - ஒருகாலத்தில்; ஒரு சேர 343.

**ஒருதலையா** - உறுதியாக 119.

**ஒரு தலையாக** - துணிபாக 357.

**ஒருதலையான்** - ஒருவரிடத்து மாத்திர முண்டானல் 1196.

ஒருத்தியை - ஒரு பெண்ணுக்கு 1313.

ஒருநாளை - ஒரு நாளைக்குள்ள ; அப்பொழுதுள்ள 156.

ஒருபால் - ஒருபக்கம் 118.

ஒருபொழுதும் - ஒரு நொடிப் பொழுதும் 337.

ஒருமை - ஒரு பிறப்பு 398, 835; கற்பு 974.

ஒருமைக்கண் - ஒரு பிறப்பில் 398.

ஒருமைமகளிர் - ஒரு நிலையில் மனமுடைய (கற்புடைய) பெண்களைப்போல 974.

ஒருமையுள் - ஒரு பிறப்பில் ; ஒரு வழிப்பட்ட உள்ளத்தினாலே 126.

ஒருவந்தம் - உறுதியாக, திண்ணமாக 563 ; உறுதியாக 593.

ஒருவரால் - ஒருவராலும் 1004.

ஒருவற்கு - ஒருவனுக்கு 40, 95, 398, 400; 414, 454, 600 ; 797, 971, 988, 1023, 1026, 1052.

ஒருவனை - ஒருத்தனை 366.

ஒருவன் - ஒருத்தன் 38, 161, 181......

ஒருவுக - விடுக 800.

ஒருவுதல் - விடுதல் 652.

ஒரூஉம் - நீங்கும் 812.

ஒலித்தக்கால் - இரைந்தால் 763.

ஒல்காமை - தளராமை 662.

ஒல்கார் - நீங்கார் 13,5; தளரார் 218, 597.

ஒல்லா - உடன்படாத, இசையாத 1064; பொருந்தாத 1136 ; உடன்படாமல் 1271.

## ஓ

ஓஒதல் - தவிர்தல்; ஓதல் என்பது ஒரு சொல் நீர்மைத்து, ஓவுதல் என்பது குறைந்து நின்றது 653.

ஓசை - ஒலி 27.

ஓச்சி - தொடங்கி 562.

ஓச்சும் - செலுத்தும் 544, 545.

ஓடா - ஓடமாட்டா 496.

ஓடி - சென்று 210.

ஓடு - உடன் (3-ஆம் வேற்றுமை உருபு) 37, 410, 413, 426, 632, 636, 730, 962, 983, 310.

ஓடும் - செல்லும் 496.

ஓட்டு - தோல்வி 775.

ஓதி - கற்று 834.

ஓத்து - வேதம்; ஓதப்படுவது 134.

ஓம்பப்படும் - காப்பாற்றப்படும் 131.

ஓம்பல் - வழுவாமல் செய்தல்; வழுவாமல் பாதுகாத்தல் 43; பாதுகாத்தல் 390; ஒழிக 612; காத்தல் (சோர்வுபடாமல் சொல்லல்) 642; தவிர்க்க 820; செலவினைத் தடைப்படுத்துவித்தல் 1155.

ஓம்பா - இகழும்; செய்யாத, போற்றாத 89; ஒழிக 861.

ஓம்பி - போற்றி, பேணி 81; உபசரித்து 86; காத்து 88; போற்றி 132; பாதுகாத்து 244, 549.

ஓம்பின் - பாதுகாப்பின் 1155.

ஓம்பு - தவிர் 1149

ஓம்புக - ஒழிக 506, 861.

க

கல்லாதார் - படியாதவர் 409.

கல்லாதான் - படியாதவன் 402, 404,

கல்லாமை - கல்வியின்மையால் உண்டாகும் குற்றம் [அதி. 41]

கல்லார் - கல்வியறிவில்லாதவர் 408, 570.

கல்லான் - (அரசியலை) அறியாதவனோடு 870.

கல்வி - (வேண்டிய) கல்வி 383; கற்றல் 398, 400, 684, 717, 939; கற்றற்குரிய நூல்களைக் கற்றல் [அதி. 40.]

கவரிமா - கவரிமா என்னும் விலங்கு 969.

கவர்ந்து - கொண்டு, உண்டு 100,

கவலை - துயர், துன்பம் 7.

கவறு - சூது 920; சூதாடுகாய் 935.

கவிகை - குடை 389.

கவிழ்ந்து - குனிந்து 1114.

கவின் - இயற்கை அழகு 1234, 1235, 1250.

கவுள் - கன்னமுடைய 678.

கவ்விது - மிகுதலையுடையது; அலர் தலையுடையது 1144.

கவ்வை - பழி தூற்றுதல் 1144.

கழகத்து - சூதாடு களத்தின்கண் 937.

கழகம் - சூதாடுகளம் 935.

கழல் - வீரதண்டை 777.

கழல்யாப்பு - வீரக்கழலை அணிதல் 777.

கழாஅ - கழுவாத 840.

கழாஅக்கால் - (அழுக்கை மிதித்துக்) கழுவாதகால் 840.

கனையாள் - கிள்ளாள் ; நீக்காள் 1115.

களையுநர் - தறிக்கின்றவர் ; கெடுக்கின்றவர் 879.

களைவது - நீக்குவது 788.

கள் - மயக்கம் தரும் பொருள்கள் 920, 921, 924, 926, 927, 930, 1145, 1201, 1288.

கள்வ - வஞ்சகா ; கள்ளா 1288 ;
கள்வர் - திருடர் 813.

கள்வன் - திருடன் 1258.

கள்வார் - களவினைப் பயில்வார் 290.

கள்வேம் - வஞ்சித்துக் கொள்வோம் 282.

கள்ளத்தால் - களவினால் 282.

கள்ளம் - வஞ்சனை 1184 ; மறைத்தற் குறிப்பு 1275.

கள்ளாமை - வஞ்சித்துக் கொள்ளாமை 281.

கள்ளார்க்கு - திருடக் கருதாருக்கு 290.

கள்ளுண்ணுமை - ஒழுக்கமும் உயர்வும் அழிக்கும் கள்ளை உண்ணுமை [அதி. 93]

கள்ளுக்கு - கள்ளிற்கு 1281.

கள்ளை - கள்ளினை 922.

கறுத்து - பகைத்து, சினந்து 312.

கற்க - (வியங்கோள்) படிக்க 391, 725.

கற்பவை - படிக்கவேண்டிய நூல்களை 391.

கற்பின் - படித்தால் 373.

கற்பு - பதிவிரதத்தன்மை ; கணவன் கற்பித்தபடி நடத்தல் ("கற்பெனப்படுவது சொற்றிறம் பாமை", (ஔவையார்). 54 ; தலைவன் தலைவியை மணந்து இல்லிருந்து நல்லறம் நடத்தும் கால நிகழ்ச்சிகள் [அதி. 116],

## கா

**காய்வு** - *சினம்* 1246.

**காரணங் காட்டுதல்** - *காரணங்காட்டி விளக்குதல்* 929.

**காரணத்தின்** - *காரணம் ஏதுவாக* 530,

**காரணம்** - *ஏது* 270, 529, 929.

**காரிகை** - *அழகு* 571, 777, 1262.

**கார்** - *இருண்ட* 287.

**காலத்தால்** - *காலத்தோடு பொருந்த* 686.

**காலத்தினல்** - (ஆபத்து வந்த) காலத்தில் 102.

**காலத்தோடு** - *காலத்தோடு பொருந்த* 516.

**காலமறிதல்** - *வலிமையுடைய அரசன் பகைமேல் செல்வதற்கு ஏற்ற காலமறிதல்* [49]

**காலம்*** - *பொழுது* 483, 484, 485, 487, 631, 675; *சமயம்* 687; *பொழுது* 696, 830, *மருந்து கொடுக்கும் காலம்* 987.

**காலம் கருதி** - *சமயம் பார்த்து* 687.

**காலை** - *காலத்தில்* 799; *இளமைக் காலத்தில்; அறம்பொருள் இன்பங்களை அடையத்தக்க காலம்* 937; *பொழுது* 1094; *முன்னே* 1226; *விடியற்காலை* 1225.

**காலைக்கு** - *விடியற் காலத்துக்கு* 1225.

**கால்** - *பொழுது* 36, 248, 379, *உருளை* 496; *அடி* 500; *பொழுது* 674, 710, 733; *அடி* 840; *பொழுது* 859, *அடிமரம்* 430, 930; 1030; *முளை* 959; *பொழுது* 1064, 1104; *காம்பு, முகிழ்* 1115; 1166, 1179, 1218.

---

*கால்டுவெல் என்னும் சொல் ஆராய்ச்சி அறிஞர் காலம், காலன் முதலியன தமிழ்ச் சொற்கள் எனக் கூறியுள்ளனர்.

கால்ஆழ் - கால் புதைகின்ற 500.

கால் கொன்றிட - காலை வெட்டிச் சாய்க்க 1030.

காவலன் - அரசன் 560.

காவாக்கால் - அடக்காவிட்டால் 127, 301, 305.

காவாதான் - காவாத அரசன் 435.

காவாது - பாதுகாப்புத் தேடாது 535.

காவார் - காவாதவர் 127.

காவான் - முறையால் பாதுகாவான் 560.

காழ் - கொட்டை, விதை 1191.

காழ்த்தவிடத்து - வயிரம் அடைந்தவிடத்து; காழ்தல்—முதிர்தல் 879.

காழ்ப்ப - முற்ற, மிக, அதிகம் 760.

கானம் - காடு 772.

கி

கிடந்தது - முடிந்தது, கூடியது 446, 583, 1001.

கிடந்தமை - இயல்பு 959.

கிழக்கு - கீழ், கீழாகும் 488.

கிழக்காந் தலை - தலைகீழாக விழுவர் 488.

கிழமை - உரிமை 785, 805.

கிழமையை - (நட்பு) உரிமையால் செய்தவைகளை 801.

கிழவன் - (நிலத்துக்கு) உரியவன் 1039.

கிளத்தல் - சொல்லுதல் [125]

கிளவா - சொல்லாத 715.

கிளைஞர் - நண்பர் 976.

## கீ

கீழல்லார் - கீழ்மை இல்லாதவர் 937.

கீழிருந்தும் - கீழிடத்திலிருந்தும் ; இடம்—செல்வம் அதிகாரம் என்பவற்றால் இருக்குமிடம் 973.

கீழ் - கண், இல் 389 ; கீழ்க்குலம் 409 ; உள்ளாக 558, 929 ; கீழான இடம் 973, உள்ளாக 1034 ; கீழாயினன் 1074, 1079 ; கீழாயினன் 1078.

கீழ்களது - கயவரது 1075.

கீழ்நீர் குளித்தானை - நீருள் மூழ்கிய ஒருவனை 929.

கீழ்ந்திடா - அழிக்கவில்லாத ; அறுத்தலில்லாத 801.

கீழ்ப்படின் - வாழின் 558.

## கு

கு - நாலாம் வேற்றுமை உருபு 7, 8, 18, 24........

குடங்கர் - குடில் 890.

குடம்பை - முட்டை 338.

குடி - குடும்பம் 171 ; நாட்டில் வாழும் மக்கள் 381, 390 ; உயர்ந்த மரபு 502 ; நாட்டில் வாழும் மக்கள் 542, 544, 549, 554 ; குடும்பம் 601, 604 ; 609 ; நாட்டு மக்கள் 632 ; உயர் மரபு 681, 794 ; குடும்பம் 887, 888 ; உயர் மரபு 952, 954, 957, 992 ; குடும்பம் 1022, 1023, 1025, 1028, 1030.

குடிகாத்தல் - குடிசனங்களைக் காத்தல் 632.

குடிக்கு - உயர்குடியிற் பிறந்தவருக்கு 953.

குடிசெய் வகை - ஒருவன் தான் பிறந்த குடியை உயரச் செய்யும் வகை [103]

குடி செய்வல் - குடியை உயரச் செய்வேன் 1023.

குடிமை - குடிப்பிறப்பு, உயர்குலம் 133, 608, 793; உயர்ந்த குடியிற் பிறந்தவருடைய தன்மை [96]

குடியாக - (மென்மேல் வளரும்) குடியாக 602.

குடியாண்மை - குடியை ஆளுகின்றமை 609.

குடும்பத்தை - குடியை; [குடும்பம் கூட்டமாய் இருப்பது; குடுமி—கூட்டி முடியப்பட்டது. கூடு என்னும் அடியாகப் பிறந்தது குடும்பம் என்னும் சொல். இது ஆரியச் சொல்லெனல் தவறுடைத்து]

குடை - கவிகை 1034.

குணநலம் - நற்குணங்களாலாகிய நன்மை 982.

குணத்தான் - குணங்களை உடையவன் 9.

குணமில - பயனில்லாதன 9.

குணம் - நல்ல தன்மை; குணமென்பது உள்ளத்து அமைவுடைமை (காளிங்கர்) 9, 29, 504, 1125.

குணன் - குணம் 793, 868.

குதித்தலும் - கடத்தலும்; குதித்தலும் என்பதில் உம்மை சிறப்பும்மை. அது கைகூடா-மையை விளக்கிற்று 269.

குதித்தல் - கடத்தல் 269.

குத்து - மூக்கால் கொத்துதல் 490.

குரை - இசை நிறைக்கண் வந்த இடைச்சொல் 1045.

குலத்தில் - உயர் குடியில் 959.

குலத்தின்கண் - பிறப்பிடத்து 958.

குலமுடையான் - நல்ல குலத்திற் பிறந்தவன் 223.

குலம் - குடி, மரபு 956, 960, 1019.

குலம்சுடும் - குடிப்பிறப்பைக் கெடுக்கும் 1019.

குலன் - குலம் 223.

குவளை - நீலோற்பலம் 1114.

குழல் - குழலோசை 66, 1228.

குழவி - குழந்தை 757.

குழாஅத்து - சபையிடத்து 840.

குழாத்து - கூட்டம் 332.

குழூ - கூட்டம் 735.

குழை - காதணி 1081.

குழையும் - வாடும் 90.

குளவளா - குளப்பரப்பு 523.

குளித்தான் - முழுகினவன் 929.

குறி எதிர்ப்பு - அளவுகுறித்து வாங்கி அவ்வாறே கொடுப்பது ; வட்டிக்குக் கொடுப்பது 221.

குறிக்கொண்டு - குறித்து ; காமக் குறிப்புடையார் போல நகுதல் 1095.

குறித்த - நிலைக்களனாகக் கொண்டுவிடா ; உடம்பை வளர்த்ததற்கு ஊனைநத்திவாழும் (காளிங்கர்) 1013.

குறித்தது - இருப்பிடமாகக் கொண்டு அதனை விடாதது 1013.

குறித்தமையான் - குறித்து நின்றமையால் 827.

குறிப்பறிதல் - பிறர் நினைத்ததைக் குறிப்பாலறிதல் [71]

குறிப்பறிந்து - (அரசனின்) மனக் குறிப்பை அறிந்து 696.

குறிப்பறி புறுத்தல் - தலைவன் தலைவி தோழி என்போர் ஒருவர் குறிப்பை ஒருவருக்கு அறிவித்தல் [128]

குன்ற - குறைவுபட 134; கெட 898; தாழ 961.

குன்ற நினைப்பின் - (ஒருவன்) கெட்டுப் போகவேண்டு மென்று நினைப்பின் 898.

குன்ற மதித்தல் - அவமதித்தல் (மண) 898.

குன்றல் - குறைதல் 811.

குன்றன்னார் - மலைபோன்ற பெருமையுடையவர் 898.

குன்றா - குறையாத 601; குறைவற்ற 793.

குன்றி - குன்றிமணி 277, 965.

குன்றிக்கால் - குறைவுபடுமானால் 14.

குன்றிமூக்கின் - குன்றிமணியின் மூக்குப்போல 277.

குன்றின் - குறைந்தால் 990; மலைபோல் 965.

குன்றின் அனையரும் - மலைபோலக் (குடிப்பிறப்பால்) உயர்ந்தோரும் 965.

குன்று - மலை, மேடு 29, 758, 898.

குன்றும் - குறைவுபடும் 17, 239, 560.

குன்றுவ - ஒழுக்கம் குன்றும் செயல்கள் 954, 965.

குன்றுவர் - தாழ்வர் 965.

குன்றேறி யானைப்போர் கண்டற்று - மலையில் ஏறி நின்று யானைப்போரைப் பார்த்ததுபோல எவராலும் எளிதில் காண முடியும் 758.

கூ

கூகை - கோட்டான் 481

கூடலில் - சேர்க்கையின் கண் 1327, 1328.

கூடற்கண் - சேர்க்கையின் கண் 1284.

கூடாது - சேராது 887.

கூறாமை - சொல்லாமை 701, 704,

கூறான் - கூறமாட்டான் 181.

கூறிவிடும் - சொல்லிவிடும் 980.

கூறின் - சொல்லின் 22; சொல்லிச் சூதாடுவானா-யின் 933.

கூறும் - சொல்லும் 386.

கூறுவான் - சொல்லுவான் 186.

கூற்றத்தை - கூற்றுவனை 89.

கூற்றம் - இயமன் 269, 1085.

கூற்று - இயமன், 326, 765; பகுதிகளை உடையது 950; கேடு 1050; இயமன் 1083.

கூன்கையர் - பொத்தியகையர்; வளைத்தகையர் 1077.

## கெ

கெட - அழிய 359, 360, 1266.

கெடல் - தவிர்ந்திருத்தல் 612 கெடுதல் 856, 893.

கெடாஅ - அழியாது 809.

கெடின் - கெட்டுப் போகின் 369; இல்லையாயின் 854.

கேடு - கெடுதல்; வறுமை 117.

கெடுக - கெட்டுப் போவானாக 1062.

கெடுக்கும் - அழிக்கும் 447; போக்கும் 937, 1043.

கெடுதல் - அழிதல் 208.

கெடுத்து - அழித்து 938.

கெடு நீரார் - அழிந்துபோகும் குணமுடையவர் 603.

கெடுப்பதூஉம் - அழிப்பதும் 15.

கெடுப்பார் - (பகையாய்க்) கெடுப்பார் 448.

## கை

## கொ

கொட்கில் - புலப்படுமாயின் (கொட்குதல்—வெளிப்படுதல்) 663.

கொட்பு - வேறுபாடு 789.

கொண்கன் - கணவன் 1183, 1266, 1285.

கொண்ட - கொண்டவை 659 ; உள்ளே கொண்ட 745.

கொண்டவன் - பூண்டிருந்தவன் 307.

கொண்டனள் - உள்ளவளாயினள் 1315.

கொண்டற்று - கொண்டதுபோல (ஊர் நெருங்கும் அலராயிற்று) 1146.

கொண்டார் - கையில் வைத்திருப்பவர் 253 ; செய்யப்பட்டவர் 1195 ; கொண்ட காதலவர் 1205.

கொண்டாரின்-மேற்கொண்டொழுகுவாரைப் பார்க்கிலும் 551.

கொண்டான் - கணவன் 51, 56.

கொண்டு - கொண்டால் ; அறிந்தால் 22 ; மேற்கொண்டு 326, 551, கைக்கொண்டு 831 ; மேற்கொண்டு 845 ; கைக்கொண்டு 874, 921, 974 ; கொண்டுவந்து 1082 ; கைக்கொண்டு 1095, 1146.

கொண்டு ஒழுகின் - காத்துக்கொண்டு ஒழுகின் (காத்தல்—கெட்ட வழியில் செல்லாது காத்தல்) 974.

கொம்பர் - மரக்கிளை 476.

கொலை - கொல்லும் தொழில் 325, 329, 551, 1224'

கொலைக்களம் - கொல்லும் களரி 1224.

கொலையின் - கொலை செய்து 550.

கொல் - அசைநிலை 2, 28, 211, 345........; கொலை 735,

## கோ

570; அளவுகோல் 710, 796; கண்ணுக்கு மை எழுதும்கோல் 1285.

**கோல்கோடி** - நீதி தப்பி 554.

**கோள்** - கொள்ளுதல் 9, 220; துணிவு 311, 312, 646, 652 கொள்ளுதல் 780, 1059.

**கோள்இல்** - தத்தமக்குரிய புலன்களைக் கிரகித்து அறியமாட்டாத 9.

**கொள்வாரோடு** - அறியவல்லாரோடு 704.

**கோறல்** - கொல்லுதல் 254, 321.

**கோன்மை** - ஈகையை உடைமை; ஆட்சியை உடைமை அதி. 55

### கௌ

**கௌவை** - பழி தூற்றுதல் 1143, 1147 1150.

**கௌவையால்** - அலர் தூற்றுதலினால் 1148.

### ச

**சமன்** - ஒத்தநிலை 118.

**சமன்செய்து** - முன்னே தான் சமனாக நின்று 118.

**சலத்தால்** - வஞ்சகத்தால்; தீவினையால் 660.

**சலம்** - வஞ்சனை 956.

### சா

**சா** - இல்லையாகும்படியாக; இறக்கும்படியாக 824.

**சாகாடும்** - வண்டியும் 475.

**சாகிற்பின்** - சாக முடியுமானால் 780.

**சாக்காடு** - மரணம் 235, 339, 780.

**சாதல்** - இறத்தல் 183, 1244.

சிமிழ்த்து - பிணித்து; சிமிழ்த்தல் என்றது அவன் வாய்மேல் விரல் வைத்து அது படவிளித்தல் (காளிங்கர்)

சிவிகை - பல்லக்கு 37.

சில - சிலவாய வார்த்தைகள் 649,

சிலர் - சிறு எண்ணிக்கையினர் 649.

சிறக்கணித்தாள் - சிறங்கணித்ததாள்; (சிறங்கணித்-தாள்—என்பதின் விகாரம் சுருங்குதல்) 1092.

சிறந்த - மிக்க, மிகுந்த 531.

சிறந்தமைந்த - மிக நிலைத்த 900.

சிறந்தான் - நட்பிற் சிறந்தான்; அன்புடையான் 515.

சிறந்து - மிகவும்; 900.

சிறப்பின் - உயர்வின் 961.

சிறப்பினும் - உயர்வினைத்தரும் 311.

சிறப்பு - முத்தி, வீடு, தேவர்பதம் 31; மதிப்பு, பெருமை 58; 74; சுவர்க்க இன்பம் 75; வீடுபேறு 358; பெருமை 590, 630, 752; பொதுவல்லாதது, பெருமை சிறுமை எனப்-பட்ட சிறப்பியல்கள் 972; கல்வி செல்வம் முதலியசிறப்பு 977; வேறுபாடு 1012.

சிறப்பென்னும் - சிறப்பு என்னும் வீட்டுக்குக்காரண மாகிய 358.

சிறப்பொடு - விழாவோடு 18; சிறப்பும் 195.

சிறிது - சிறியது 102; சிறியதாக 412, 1075, 1301, 1302.

சிறிய சுருக்கத்து - குறைந்த வறுமைக் காலத்து 963.

சிறியர் - கீழானவர் 26.

சிறியவர் - கீழ் மக்கள் 815.

சினத்தை - கோபத்தை 307, 310.
சினம் - கோபம் 301, 431.
சினைப்பது - அரும்புவது 1203.

சீ

சீரல்ல - சிறப்பில்லாதன 962.
சீரல்லவர் - சிறியவர் 977.
சீரழிக்கும் - புகழைக் கெடுக்கும் 934.
சீரார் - சிறப்புடையவர், தவத்தர் 900.
சீரிடம் - வாய்க்குமிடம்; வாய்ப்பு 821.
சீரினும் - புகழீட்டு மிடத்தும் 962.
சீர் - அளவு 118; சிறப்பு, ஆற்றல் பெருமை 499; வீரம் 778; புகழ் 934, 962, 977.
சீர்குன்றல் இலர் - இயல்பில் வீரம் குறைவுபடார் 778.
சீர் தூக்கும் - நிறுத்து அளக்கும் 118; அளந்து பார்க்கும் 813.
சீர்த்தவிடத்து - காலம் வாய்த்தவிடத்து 490.
சீர்மை - சிறப்பு 123; மதிப்பு, ஒழுக்கம் 195.
சீறின் - கோபங் கொண்டால் 568, 899.

சு

சுடச்சுட - வருத்த வருத்த 267.
சுடரும் - ஒளிவிடும்; ஓடும் 267.
சுடல் - சுடுதல் 1159.
சுடின் - சுட்டால் 1159.
சுடும் - வருத்தும் 293; கொல்லும் 306; வெதுப்பும் 799; கெடுக்கும் 1019; வெதுப்பும் 1207.
சுட்ட - எரித்த 129.

சூழ - எண்ண, நினைக்க 176.

## செ

செய்யார் - செய்யமாட்டார் 164...
செய்யாவிடல் - செய்யாதுவிடல் என்பது செய்யா-விடல் என நின்றது 203.
செய்யாள் - இலக்குமி 84.
செய்யான் - செய்யமாட்டான் 210; செய்யாதவன் 865.
செய்யின் - செய்தால் 157...
செய்யும் நீர - செய்யவேண்டிய கடமைகளை 219.
செய்வாரின் - செய்வாரிலும் பார்க்க 295.
செய்வானேல் - செய்வான் ஆனால் 655.
செய்வினை - செய்யும் கருமம் 455, செய்கின்ற வினையை 677.
செய்வேன் - (உபசாரம்) செய்வேன் 1211.
செரு - போர் 569.
செருக்கி - களித்து, இறுமாந்து 916.
செருக்கு - செல்வம் மகிழ்ச்சி; பெருமிதம் 180; அகந்தை; மயக்கம் 201; மயக்கம் 346; அகந்தை 431; பெருமிதம் 598; மேம்பாடு; பெருமிதம் 613; அகந்தை 759; மயக்கம் 844; செல்வம் 860; களிப்பு 878, 1193.
செல - போக 422; மனம் கொள்ளும்படி 424, 686, 719, 722, 724, 728, 730.
செலல் - செல்கின்றது; செல்வதற்குக் காரணம் 1293.
செலவிடாது - செல்லவிடாது 422.
செலவு - செல்லுதல் 766.
செல் இடத்து - பலிக்கக்கூடிய இடத்து 301.
செல்க - செல்வானாக 684.

செல்கிற்பின் - *செல்லமுடியுமாயின்* 1170.

செல்பவர் - *போகின்றவர்* 1033.

செல்லா - *பலியா* 302; *உணவு செல்லாத (மண)*; *வறுமை கூர்ந்த* 330; *செய்யாத* 561; *நீங்காத* 769; *போகாத* 1255.

செல்லாதது - *முடியாதது* 472.

செல்லாது - *நடவாது* 18, 326.

செல்லாத்துனி - *ஒன்றாலும் நீக்க முடியாத பிணக்கு*; *நீங்காத வெறுப்பு* 769.

செல்லாமை - *பிரியாமை* 1151,

செல்லா வாழ்க்கை - *வறுமை* 330.

செல்லான் இருப்பின் - *சென்று பாராமல் இருந்தால்* 1039.

செல்லிடத்து - *பலிக்குமிடத்தில்* 301.

செல்லுமிடத்து - *கோபித்துச் செல்லும்போது* 250.

செல்லும் வாய் - *செய்யக்கூடிய இடம்* 33; *முடியும் வழி*; *முடியும் உபாயம்* 673.

செல்வச் செவிலி - *செல்வத்தையுடைய செவிலி* 757.

செல்வது - *போவது* 767.

செல்வத்திற்கு - *மிக்க பொருளுக்கு* 178.

செல்வத்துள் செல்வம் - *செல்வங்களுள் மேலான செல்வம்* 241, 411.

செல்வமும் - *செல்வத்தையும்* 31.

செல்வம் - *மிக்க பொருள்* 31, 125......

செல்வம் தகைத்து - *மிக நன்மையுடையதாம்* 125.

செல்வரை - *பொருளுடையவரை* 752.

செல்வர் - *பொருளுடையவர்* 731, 1010.

## சே

## சொ

சோரா - சோர்ந்தும் 689.

சோரார் - சோர்வுபட (வழுப்பட) சொல்லார் 721.

சோரும் - வெளிவிடுவான் 847; கழலும் 1234.

சோர்விலது - (தன்னைப் பிறரறியமுடியாதபடி) எச்சரிக்கையாயிருத்தல் 586.

சோர்விலன் - மறவாதவன் 647.

சோர்வு - மறதி, அயர்வு 56, 531, தளர்வு 586, 642; மறப்பால் ஒழிதல் 647; தளர்வு 930, 1044.

சோர்வுபடும் - மறையும் 405; ஏற்றுக்கொள்ளப்படாது 1046.

## ஞா

ஞாட்பினுள் - போர்முனையில் 1088.

ஞாலங்கருதுபவர் - பூமி முழுவதையும் வெல்ல நினைப்பவர் 485.

ஞாலத்திற்கு - உலகில் வாழும் உயிர்களுக்கு 557.

ஞாலத்தின் - மண்ணுலகத்திலும் 102.

ஞாலத்து - உலகத்திலே 141.

ஞாலம் - உலகத்தில் வாழ்பவர் 245; பூமி 485, 648, 1016; உலகில் வாழ்பவர் 1058.

ஞான்று - பொழுது, காலம், 44, 145......

## த

தக - தகுதியாக; ஏற்க 391.

தகர் - ஆட்டுக்கடா 486.

தகவிலர் - நடுவு நிலைமையற்றவர்; தருமமில்லாதவர் 114.

தகுதி - நடுவு நிலைமை 111.

தகுதியான் - பொறையால் 158.

தகை - நன்மை 56; தகுதி, குணம் 643; தகுதி 768, மேம்பாடு—ஆடல் பாடல் அழகு 916; தன்மை (நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு) 1084; மிகுதி 1305; அழகு [109]

தகைத்து - சிறப்பினையுடையது 125; தன்மையுடையது 486; பெருமையுடையது 1064.

தகைமாண்ட - பெருமை மிக்க 897.

தகைமை - பெருமை 405; உயர்குணம் 613; உரிமை 700, 802, 803, 808; உயர்குடிப்பிறப்பு 968; நிறையுடைமை 1255.

தகைமைக் கண் - பெருமையுள் 874.

தகைமையவர் - பெருமையுடைவர் 447.

தகைய - தன்மையுடையன 418.

தகையால் - தோற்றப் பொலிவால் 768; தன்மையால், உரிமையால் 804; தன்மையோடு 1083; களிப்பு மிகுதியால், பெருமிதத்தால் 1182.

தகையான் - தன்மையுடையவன் 217; உரிமையால் 804.

தக்க - தகுதியுடைய பொருள்கள் 54, 466, 805.

தக்கது - தகுதி உடையது 633, 686, 732, 780, 1018, 1137, 1173.

தக்கது உடைத்து - தகுதி உடைத்து 220.

தக்கனள் - தகுதியாயினள், அமைந்தாள் (புலந்தாள்) 1316.

தக்காங்கு - தக்க முறையாக 561.

தக்கார் - தகுதியுடையவர் 114, 446, 731; தகுதியுடையோர் (முனிவர்); ஏற்புடையரை 1051.

தக்கார்க்கு - தகுதியுடையவர்களுக்கு, அறிவுடையோர் முனிவர் முதலாயினோர்க்கு 212, 1005.

தக்காள் - தக்கபடி செலவு செய்பவள் 51.

தங்கண் - தம்மிடத்தில் 107.

தங்கா - உள்ள ஆகமாட்டா 19.

தங்கி - நின்று 472.

தங்கியான் - தங்கியவனது 117.

தங்கிற்று - நிலைபெற்றது 613; அடங்கிற்று 874.

தங்குதல் - கிடத்தல் 671.

தங்கும் - நிலைபெறும் 389.

தஞ்சம் - எளிமை 863, 1300.

தஞ்சம் எளியன் - மிக எளியன், (இவை ஒரு பொருட் பன்மொழிகள்)

தடிந்து - கடல்நீரை உண்டு அதற்குக் குறைவு செய்து 17.

தணந்தமை - பிரிந்தமை 1233, 1277.

தணிக்கும் - தீர்க்கும் 948.

தண் - தாழ்மையான 548; குளிர் 1104; மென்மை 1239.

தண்டம் - தண்டனை 567.

தண்டா - தணியாத 1171.

தண்டாநோய் - தணியாத நோய் 1171.

தண்ணம் துறைவன் - குளிர்ந்த துறையையுடையவன் 1277.

தண்ணென்னும் - குளிரும் 1104.

தவ்வை - தமக்கை ; மூதேவி 167.
தழால் - தழுவுதல் [53].
தழீஇ - தழுவி, அணைத்து 544 ; 913.
தழீஇயது - நட்பாக்குவது 425.
தளர்ந்து - தவறி 716.
தளிர்த்து - கொழுந்துவிட்டு 78.
தளிர்ப்ப - இன்பத்தால் தழைக்க 1106.
தள்ளா - குறைவில்லா 731.
தள்ளாது - தவறாது 290.
தள்ளாமை - தவறாமை 596.
தள்ளினும் - தவறினும் 596.
தள்ளும் - தவறிப்போம் 290.
தறுகண் - வீரம் ; மூர்க்கம் 783.
தற்கொண்டான் - கணவன் ; தன்னைக் கொண்டவன் 56.
தற்று - இறுகக் கட்டிக்கொண்டு 1023.
தனக்கு - தன் பொருட்டு 847.
தனித்தொழிய - தனித்துக் கிடக்க 338.
தனிமை - தனியேயிருக்கும் தன்மை 814.
தன் - தன்னை 51, 56......
தன் காத்து - (கற்பினின்றும் தவறாமல்) தன்னைக் காத்து 56.
தன் கொண்டான் - கணவன் 56.
தன் செய்து - தனது பொருளைப் பெருக்கி 878.
தன் செற்று - தன்னை வருத்தி 1009.
தன் நாளை - தனக்குச் சென்ற நாளை 776.
தன் நோய் - தன்னாலாகிய நோய் 1102.

### தா

## தி

## தீ

## து

துகில் - ஆடை 1087.

துச்சில் - ஒதுக்கு 340.

துச்சிலிருந்த - ஒதுக்குக் குடியிருந்த 340.

துஞ்சல் - உறங்குதல் 1049.

துஞ்சா - உறங்கமாட்டா 1179.

துஞ்சினர் - உறங்கினர் 926.

துஞ்சின் - உறங்குமாயின் 1212.

துஞ்சும் - உறங்கும் 1218.

துடைத்தவர் - நீக்கினர் 107.

துடைத்து - போக்கி 615.

துணிக - தொங்குக 467.

துணிவாற்றி - துணிந்து 669.

துணிவு - முடிவு 21; ஆண்மை 383; முடிவு 533, 671; அஞ்சாமை 688.

துணை - அளவு 22; உதவி 36, 41, 42, 51, 76; அளவு 87, 104; உதவி 132; அளவு 144, 156, 397, 433; துணைவர் 1234; அளவு 1282.

துணைத்து - அளவினது 87.

துணைமை - துணையாயிருக்குந் தன்மை 688.

துணையர் - பெருமையுடையவர் 144.

துணையார் - துணையாகிய தன்மையுடையவர் 497.

துப்பார்க்கு - உண்பவர்க்கு 12.

துப்பின் - வலிமையினையுடைய 895; பகையானல் 1165.

## தூ

## தெ

தெரிதல் - *ஆராய்தல்* 717.

தெரிந்த - *ஆராய்ந்தெடுத்த* 462, *ஆராய்ந்த* 712.

தெரிந்து - *ஆராய்ந்து* 23, 132, 186, 501, 712, 1172,

தெரிந்து செயல் வகை - *ஆராய்ந்து செய்யும் திறமை* [47].

தெரிந்து வினையாடல் - *தெளியப்பட்டவரை அவர் செய்யவல்ல வினையை அறிந்து அவற்றின் கண்ணே செலுத்துதல்* [52].

தெரியா - *ஆராயாத* 583.

தெரியான் - *உடலியல்பும் அதற்கேற்ற உணவும் காலமும் ஆராயாதவன்* 947.

தெரியுங்கால் - (*நுட்பமாக*) *ஆராயுமிடத்து* 503.

தெரிவார் - *அறிவார்* 104, 329.

தெரிவான் - *ஆராய்பவன்* 27.

தெருளாதான் - *அறிவில்லாதவன்* 249.

தெவ் - *பகைவர்* 639.

தெவ்விர் - *பகைவர்களே* 771.

தெளித்த - *தெளிவித்த* 1154.

தெளிந்தார் - (*தம்மைச்*) *சந்தேகப்படாதவர்* 143.

தெளிந்தார்க்கு - *மெய்ப் பொருளைக் கண்டவருக்கு* 353.

தெளிந்தான் - *நம்பினவன்* ; *சந்தேகம் தீர்ந்தவன்* 508, 510.

தெளிவு - *நம்பிக்கை* ; *ஆராய்ந்து காணும் தெளிவு* 464, 502, 510, 513.

தெள் நீர் - *தெளிந்த நீர்* 1065.

தெள்ளியர் - *அறிவுடையார்* 374.

## தே

**தேறற்பாற்றன்று** - *நம்புதல் கூடாது* 825.

**தேருவிடினும்** - *நம்பாவிடினும், தெளியாவிடினும்* 876.

**தேருன்** - *அறியமாட்டான்* 848; *சேராதவனாக* 876.

**தேறிய** - *தெளிந்த* 514.

**தேறியார்** - *தெளிந்தவர்* 1154.

**தேறின்** - *தெளிந்தால்* 876.

**தேறுக** - *தெளிக ; ஐயுறுதிருக்க* 509.

**தேறும்பொருள்** - *அவரவர் ஆற்றலுக்கேற்ற கருமங்கள்* 509.

**தேற்றம்** - *மனங்கலங்காமை* 513 ; *நம்பப்படுதல்* 766 ; *நம்புதல்* 1153.

**தேற்ருதவர்** - *அறியாதவர்* 187, 289, 626, 649.

**தேற்ருதார்** - *அறியாதார்* 1054.

**தேற்றுதல்** - *தெளிவித்தல்* 693.

**தேன்** - *தேன்* 1121.

## தொ

**தொகச் சொல்லி** - *சுருங்கச் சொல்லி* 685.

**தொகுத்தவற்றுள்** - *திரட்டிய அறங்களுள்* 322.

**தொகுத்தார்க்கு** - *திரட்டியவருக்கு* 377.

**தொகை** - *திறமை ; குழு (செஞ்சொல், இலக்கணச் சொல், குறிப்புச் சொல்லின் தொகை)* 711, 721 ; *ஒருங்கு* 1043.

**தொக்க** - *ஒத்தன* 589.

**தொக்கு** - *ஒருங்கு கூடி* 545.

தொடங்கற்க - *தொடங்காதுவிடுக* 491.

தொடங்கார் - *செய்யத் தொடங்கார்* 464.

தொடரார் - (*அவனை*) *தொடர்ந்து அணுகிவின-வாமல்* 695.

தொடர் - *தொடர்பு* ; *நட்பு* 450.

தொடர்பு - *சம்பந்தம்* 73; *நட்பு* 783, 806, 819, 820, 882, 920.

தொடர்ப்பாடு - *தொடர்பு* 345.

தொடலை - *மாலை* 1135.

தொடலைக் குறுந்தொடியாள் - *மாலைபோல் தொடுத்த சிறியவளைகளை யணிந்தவள்* 1135.

தொடி - *ஒரு அளவை* ; *ஒரு பலம்* 1037; *வளையல் அணிந்தவள்* 1101, 1135; *வளையல்* 1234, 1238; *வளையணிந்தவள்* 1275.

தொடியார் - *பெண்கள்* 911.

தொடியொடு தோள்நெகிழ - *வளையோடு தோள்கள் பண்டுபோல இருக்காது நெகிழ* 1236.

தொடின் - *தொட்டால்* 1154.

தொட்டனைத்து - *தோண்டிய அளவுக்கு* 396.

தொலைவிடத்தும் - *தொலைந்து சிறிதாகிய விடத்தும்* 762.

தொலைவு - *அழிதல், வறுமை* 806.

தொல் - *பழமை, பழைய* 1043, 1234, 1235.

தொல்கவின் - *பழைய இயற்கை அழகு*. 1235.

தொல்படை - *மூலப்படை* 762.

தொல்லை - *பழமை* 806.

தொல் வரவும் - *குடிப்பிறப்பின் வரவையும்* 1043.

## தோ

**தோல்வி** - (தன்னினும் உயர்ந்தாரிடத்து இருந்து பெறும்) தோல்வியை 986.

**தோழி** - பாங்கியே 1284.

**தோளவள்** - தோளையுடையவள் 1113.

**தோள்** - தோள்கள் 149, 906...

**தோறு** - போது எல்லாம் 1106, 1110.

**தோறும்** - தினமும் 520, 1110, 1145.

**தோற்றத்தான்** - தோற்றத்துடனே 1084.

**தோற்றம்** - உயர்வு 124; தவவேடம் 272; பிறப்பு 1003; புகழ் 1059.

**தோற்றவர்** - எதிர்த்தலாற்றுது சாய்ந்தவர் 1327.

**தோற்றவர் வென்ருர்** - ஊடலில் தோற்றவர் வென்றவராவர் 1327.

**தோன்றல்** - தோன்ருதிருத்தல் வேண்டும் 1119.

**தோன்றலின்** - பிறவியிலும் பார்க்க 263.

**தோன்ரு** - தோற்றமுமில்லாமல் 479.

**தோன்ருமை** - பிறவாமை 236.

**தோன்றிவிடும்** - வெளிப்பட்டுவிடும் 1253.

**தோன்றிய** - உண்டான 1328.

**தோன்றின்** - பிறக்கின்; உண்டாவதாயின் 884, 885, 958.

**தோன்றும்** - உண்டாகும் 371, தோன்றுகின்ற 1322; 1324.

## ந

**நக** - மகிழ 187, 685; மலர 786; மகிழ 829; சிரிக்க 1173.

**நகச்செய்து** - மகிழும்படி செய்து 829.

நடுக்கு - அசைவு 654.

நடுங்கல் - பயப்படுதல் 680.

நடுங்கு அஞர் - நடுங்குதற்கு எதுவாகிய துன்பம் 1086.

நடுவு - நடுவுநிலைமை 113, 116, 117, 171, 172.

நடை - நடத்தல் 59, (வெளிப்படை குறிப்புப் போன்ற) போக்கு 712; நடத்தல் 1014

நட்ட - நட்புக்கொண்ட 791.

நட்டல் - நட்புக்கொள்ளுதல் 784.

நட்டார் - நண்பர் 804, 805, 808, 826, 908, 1293.

நட்டு - நட்புக்கொண்டு 812, 830.

நட்பது - தோழமைகொள்வது 786.

நட்பினுள் - நட்பாயிருக்கும்போதே 1165.

நட்பு - உறவு, தோழமை 187, 338......

நட்பு ஆடல் - சிநேகங்கொள்ளல் 187.

நட்பு ஆராய்தல் - நட்பு செய்தற்குரியாரை ஆராய்ந்து கொள்ளும் முறைமை [80]

நணித்து - அண்மையில் உள்ளது 851.

நணியது - கிட்டியதாதல் 353.

நண்ணார் - பகைவர் 1088.

நண்ணேன் - சேரமாட்டேன் 1311.

நண்பு - நட்பு 998.

நண்பென்னும் - (யாவரும்) நண்பரென்னும் 74.

நத்தம் - ஆக்கம்; நந்து என்னும் தொழிற்பெயர் விகாரத்தால் நத்து என்று ஆய்ப் பின் அம்- என்னும் பகுதிப்பொருள் விகுதிபெற்று நத்தம் என்றாயிற்று 235.

நாண - வெட்கப்பட 314, 1149.

நாணத்தகது - நாணத்தக்க பழி (1) 1018 (2) நாணத் தக்க குற்றம் (3) 1018.

நாணுமை - நாணவேண்டிய பழி பாவங்களுக்கு அஞ்சாமை 833.

நாணல் - நாணம் இழக்க நேர்ந்தால் 1017 ; இயந்திரக் கயிற்றால் உண்டாகிய தனது அசைவினால் 1020.

நாணன் - நாணமாட்டான் 1018.

நாணின - வெட்கமடைந்தன (தமக்குமுன் நாணின் மலர்களுக்கு இன்று நாணின.)

நாணினை - வெட்கத்தை 1132.

நாணு - நாணம், 902, 903, 1011, 1162, 1251.

நாணுடைமை - உயர்ந்தோர் தமக் கொவ்வாத கருமங்களைச் செய்ய நாணும் தன்மை [102].

நாணுபவர் - பயப்படுகின்றவர் 172.

நாணுவார் - அஞ்சுவார் 433, 1015.

நாண் - நாணம், இழிவான செயற்கண் வருவது 502, 902, 907, 924, 951, 952, 960.

நாண் ஆள்பவர் - (அதனது சிறப்பை அறிந்து) நாணத்தை விடாது ஒழுகுபவர் 1017.

நாண்விடு - (அல்லது) நாணத்தை விடு 1247.

நாண்வேலி கொள்ளாது - நாணை வேலியாகக் கொள்ளாது 1016.

நாமம் - அச்சம் 149 ; பெயர் 360.

நாம் - நாங்கள் 1195.

நாரின்மை - ஈரமின்மை 958.

நார் - இரக்கம், அன்பு 833, 958.

நி

நினைத்து - அறிந்து, விசாரித்து 1241; (உறுப்புக்களின் அழகை) நினைத்து 1320.

நினைந்து - எண்ணி எண்ணி 1209.

நினைப்ப - நினைத்தால் 1202.

நினையார் கொல் - நினையாமலிருக்கின்றார் போலும் 1203.

நின்றக்கடை - நீங்காதபோது 1019.

நின்றவர் - நின்ற வீரர் 771.

நின்றன்னார் - நிலை பெற்றாற் போன்ற செல்வமுடையவரும் 898.

நின்றாரின் - நின்றவர் போல 142.

நின்று - (இடையில் நீங்காத) நிற்ச, நிற்ப என்பது நின்று எனத்திரிந்து கின்றது. 11.

## நீ

நீ - நீ 1123, 1242...

நீக்கப்பட்டார் - கைவிடப்பட்டார் 920.

நீக்கி நிறுத்து - நீக்கி நிறுத்தி விட்டு 1132.

நீக்கியார் - போக்கினவர் 330.

நீங்க - கெட 358.

நீங்கலர் - நீங்க மாட்டாத 1216.

நீங்கா - (ஒரு போதும்) நீங்க மாட்டா 383.

நீங்கி - தவிர்த்து 246; (1) நீக்கி (2) நீங்கி 252.

நீங்கியான் - (பற்று) நீக்கியவன்; துறந்தவன் 341

நீங்கின் - பிரியின் 495 1104, 1155.

நீடு - நெடுங்காலம் 3, 6; நீட்டித்தல் 566; நெடிது 1312.

நீடுஇன்றி - நீடிக்காது 566.
நீடுக - நீளுக 1329.
நீடுவது - நீளுவது 1307.
நீடுவாழ்க - நெடிது வாழ்க 1312.
நீடுவாழ்வர் - நீண்டகாலம் (இகத்திலும் பரத்திலும் வாழ்வர் 6.
நீட்டம் - நீளம் 595.
நீட்டலும் - மயிரை வளர்த்தலும் 280.
நீட்டி - நீளமாக, எஞ்சாமல் 796 ;
நீத்தக்கடை - விட்டுப் பிரிந்தபின் 1149.
நீத்தார் - துறவிகள் 21 ; நீங்கினர் 1220.
நீத்து - நீங்க (நீப்ப என்பது நீத்து எனத்திரிந்து நின்றது) 1262.
நீந்தல் - நீந்த மாட்டா 1170.
நீந்தார் - அழுந்துவர் ; நீந்தமாட்டார் 10.
நீந்தி - நீந்தியும் 1167.
நீந்தும் - கடக்கும் 1164.
நீப்பர் - நீங்குவார்கள் 969.
நீப்பினும் - நீங்கிப் போமாயினும் 327.
நீப்பின் - பிரிந்தால் 1154.
நீர - தன்மையுடையன 34, 219, 782.
நீரது - தன்மையுடையது 221, 745.
நீரர் - தன்மையுடையவர் 1319.
நீரவர் - அறிவுடையோர் 782.
நீரள் - இயல்புடையவள் 1111.
நீராடி - நீரில் முழுகி 278.
நீரான் - தண்ணீரால் 298.

நு

நுண்ணியர் - நுட்பமானவர் 1126.

நுண்மாண் நுழைபுலம் - நுனித்தகன்ற கூரிய அறிவு 407.

நுதல் - நெற்றி 1011, 1238, 1240, 1328.

நுதற்கு - நெற்றிக்கு 1088 ; பெண்களுக்கு 1123.

நுதுப்பேம் - அவிப்போம் 1148.

நுமர் - உமக்கு வேண்டியவர் 1318.

நுழை - ஆராய்ச்சியுடைய, நுணுகிச்சென்ற, கூரிய 407.

நுழைந்து - புகுந்து 130.

நுனி - முனை 476.

## நூ

நூலர் - அரச நீதியை அறிந்தவர் 683.

நூலாருள் - நீதி நூலையறிந்த அமைச்சரிடையில் 683.

நூலும் - அரசியல் நூலும் 581.

நூலொடு - அறிவு நூல்களோடு 726.

நூலோடு - நூலறிவோடு 636.

நூலோர் - அறநூலார் 322 ; மருத்துவ நூலார் 941.

நூலோர்க்கு - நீதிநூலுடையவர்களுக்கு 533.

நூல் - புத்தகம் 373, 401; ஆலோசனை 440 ; மறை நூல் 543 ; நூற்பொருள் 783 ; பஞ்சு முதலிய வற்றால் முறுக்கிய நூல் 1273.

நூல்இன்றி - நூல்களைக் கல்லாது, கற்று அறிவு நிரம்பாது 401.

நூல் வல்லனை - அரச நீதி வல்லவன் 683.

நூறு - நூறாகிய எண். 932
நூற்கு - வேதத்துக்கு 543.

## நெ

நெகிழ - மெலிய 1236.
நெஞ்சத்தர் - உள்ளத்தின் கண்ணராக 1218.
நெஞ்சத்தார் - உள்ளத்தில் உள்ளார் 1128.
நெஞ்சத்தான் - உள்ளமுடையவன் 169, 185.
நெஞ்சத்து - அன்பால் 786. உள்ளத்துடன் 910.
நெஞ்சத்தை - உள்ளத்தை 1252.
நெஞ்சம் - மனம், உள்ளம் 116, 253, 272, 706, 917, 1259, 1299.
நெஞ்சின் - உள்ளத்தால் 276; 917; உள்ளத்துடன் 1297; நெஞ்சினையுடைய 1053.
நெஞ்சு - உள்ளம், 281, 293, 842, 1081, 1264, 1284, 1291, 1295, 1296, 1298; உள்ளமே 1200, 1242, 1246, 1248, 1249, 1291, 1292.
நெடிது - நெடுநாளாக 562, 943.
நெடிய - நீண்டனவாய் 1169.
நெடும் - ஆழமான 495; நீண்ட 496; பெரிய 566.
நெய்யால் - நெய்யினால் 1148.
நெருஞ்சிப்பழம் - நெருஞ்சி முள்போல வருத்தஞ் செய்யும் 1120.
நெருநல் - நேற்று 336, 1048.
நெருநற்று - நேற்று 1278.
நெருப்பினுள் - தீயினுள் 1049.
நெறி - நூல்முறை 6, 324, 356, 477.

## நே

நேரா - கூடாமலிருந்து 821.
நேர் - ஒப்பர் 813.
நேர்ந்தேன் - உடன்பட்டயான் 1181.
நேர்வது - உடம்பட்டுக்கொடுப்பது 733.

## நொ

நொந்தது - வருந்தியது 877.
நொந்தார் - வருந்தினர் 1308.
நொந்து - வருந்தி 157, 1236.

## நோ

நோ - துன்பம் 157.
நோக்க - பார்க்கும்போது 90, 1098.
நோக்கப்படும் - பார்க்கப்படுவான் 1047.
நோக்கம் - பார்வை 1085, 1092.
நோக்கா - ஆராயாத 184.
நோக்காக்கால் - பாராதபோது 1094.
நோக்காத - பார்க்காத, உட்கொள்ளாத 148.
நோக்காது - நினைப்பதும் செய்யாது 1009.
நோக்காமை - பாராதிருத்தல் 1095.
நோக்கான் - (நீதி நூலை) ஓதமாட்டான் (1) பாரான் (2) 865.
நோக்கி - பார்த்து 93, 189, 528, 673, 701, 708, 1093, 1094, 1173, 1297; கருதி 189 (1); எதிர்பார்த்தது 542; குறிப்பாலறிந்து 708 (2).

**நோக்கினள்** - அழகுடையவள் அல்லது பார்க்கப்பட்-வள் 1082, பார்த்தாள் 1093.

**நோக்கு** - பார்வை 1082, 1089, 1091, 1097, 1099, 1100.

**நோக்கும்** - பார்க்கின்ற 1094.

**நோதக்க** - வெறுக்கத்தக்கவற்றை 805.

**நோதல்** - வருந்துதல் 341, 1308.

**நோய்** - துன்பம் 261, 315, 359, 429, 442, 1160, 1162, 1174, 1200, 1226, 1241, 1243, 1266, 1303: இன்னுதவை 320; குற்றம் 851; உடற்பிணி 848, 853, 941, 946, 947, 948; காமப்பிணி 1091, 1147, 1159, 1171, 1175; 1176, 1183, 1227, 1255, 1280, 1301; வினைப்பயன்கள் 360.

**நோய்க்கு** - துன்ப நீக்கத்திற்கு 1102.

**நோய்ப்பால** - நோய் செய்யும் கூற்றவாகிய தீவினைகள் 206.

**நோவாதவர்** - நோன்பு செய்யாதவர், தவஞ்செய்-யாதவர் 270.

**நோவது** - வருத்துதல் 237, 1242.

**நோவல்** - நோவாது கொள்வேன் 1236.

**நோவற்க** - நோவைச் சொல்லாதொழிக 877.

**நோவார்** - நொந்துகொள்ளாதவராய் 237.

**நோற்கிற்பவர்** - பொறுப்பவர் 159 [நோன்-பகுதி, இல்-சாரியை இடைச்சொல், பகர ஒற்று எதிர்கால இடைநிலை, அர்-விகுதி, அ-சாரியை, வகர ஒற்று உடம்படுமெய். இது எதிர்கால வினையாலணையும் பெயர்].

## ப

படு - உண்டாக 231, 237, படும் வகை 524; படுதலை 922.

படர் - பிரிவினலுண்டாகிய வருத்தம் [அதி. 120].

படர்தரும் - பரவிவரும் 1229.

படல் - துயிலுதல் 1136, 1175.

படல் ஆற்று - உறங்க முடியாமல் 1175.

படா - ஒலியா, ஒலிக்கமாட்டா 1115; படாமையால் 1140; நிமிர்ந்த, வளையாத 1087.

படாஅதவர் - அனுபவியாதவர் 623.

படாஅதி - மறையாதிருப்பாய் 1210.

படாஅமை - உண்டாகாமல் 38.

படாஆறு - படாமையால் 1140.

படாம் - முகபடாம் (முகத்திலிடும் ஆடை) 1087.

படி - பூமி 606.

படிவத்தர் - தவவேடத்தர் 586.

படிறு - வஞ்சனை 91.

படிற்று - குற்றத்தையுடைய, மறைந்த 271, 275.

படின் - உண்டாகுமானல் 216, 217; தாழுமாயின் 272; வாழின், குடியிருக்கின், அகப்படின் 558; உற்றால் 654; பிறக்குமாயின், உளதாயின் 886; இருக்குமாயின், இடத்ததாயின் 977.

படு - வரும், உண்டாகின்ற 172; படுக்கின்ற 279; பெரும், பெறும் 676.

படுக்கும் - ஆக்கும், உண்டாக்கும், உளதாக்கும் 372.

படுத்து - வளர்த்து 512.

படுப - படுவர் 810.

படுபவோ - உறுவரோ 512.

படுபாக்கு - உண்டாவதை, வருவதை 136, 164.

படுப்பது - படுத்துவது, உறுவிப்பது 460, நிலை-பெறச் செய்வது, இடுவது 465.

படும் - படுவன் 50, 214; படுதல் வேண்டும் 265, 335; தரும் 412; வேண்டும் 698; தங்கும் 933, வளரும் 947, படுவான் 1047; படுவர் 1078; வெளிப்படும், படரா நிற்கும் 1138, 1254.

படுவ - உண்டாவன 172.

படை - கொலைக்கருவி 253; சேனை 381; கருவி, ஆயுதம் 555; சேனை 764, 768, 769; படைக்-கலம், கொலைக்கருவி 828, கருவி 985; கொலைக்கருவி 1258; கொலைக்கருவி 1324.

படையான் - படையை உடையவன் 478.

பட்ட - உண்டாகிய, நின்ற 408, 878; உற்றநோய்-கள் 1140.

பட்டடை - தறிப்பதற்கு அடியில் வைக்கும் கட்டை 821.

பட்டன்று - கிடந்தது 999.

பட்டாங்கு - நிலையாக (முன்படர்ந்தது போல), பட்-டது 1189.

பட்டி - கண்டபடி நடப்பவன் 1074.

பட்டு - தொடர்புபடுதலால் 996.

பணி - மெல்லிய 1121, தாழ்ந்த 1258.

பணிதல் - அடங்கி நடத்தல் 125; தாழ்ந்து ஒழுகுதல் 963, 985.

பணிமொழி - தாழ்ந்த மொழி, நம்மினும்தான் அன்பு மிருதியுடையவனுகச் சொல்லும் சொற்கள் 1258.

பணியும் - தாழ்ந்து ஒழுகும் 978.

பணிவு - வணக்கம், தாழ்மை 95, 960.

பணை - பெருமை 1234.

பணை நீங்கி - மெலிந்து 1234.

பண் - இசை 573.

பண்டம் - பொருள் 475.

பண்டு - முன்பு 1083, 1133.

பண்பு - இயல்பு, குணம் 45, 62.........

பண்புடை - நற்குணங்களையுடைய 62.

பதடி - பதர் 196.

பதத்தால் - செவ்வியராதலால், காலத்தையுடைய-ராதலால் 991.

பதத்தான் - காலத்தையுடையனுய், செவ்வியை-யுடையனுய் 548.

பதி - இடம் 1015; வாழிடம் 1229.

பதியில் - தமது இடங்களில் நின்று 1116.

பந்து - பத்தென்னும் எண் 450, 817.

பயக்கும் - தரும், கொடுக்கும் 97, 123.

பயத்த - பயனைச் செய்வன, பயனைத் தருவன 705.

பயந்தற்று - பெய்தாற்போலும் 1192.

பயப்பது - தருமவன், விளைவிப்பவன் 685, 690.

பயம் - பயன் 354, 758, 740.

பயவா - பயனடையா 406; விளைக்காத 439, 652.

பயனில - தனக்கும் பிறருக்கும் பயனில்லாதவற்றை 191.

பயனுண்டாயின் - (தீய) பயனுண்டாகுமானால் 128.

பயன் - நன்மை 2...; பதில் உபகாரம் 103 ; பயன்படுகின்ற 216 ; விளைவு, விளைச்சல் 239 ; பால் 560 ; அறம் 901 ; பொருள் 912.

பயன்சாரா - பயனோடு படாத 194.

பயன்மரம் - பயன்படும் மரம், காய்க்கும் மரம் 216.

பயன்படுவர் - உள்ளது கொடுப்பர் 1078.

பயில்தோறும் - பழகுந்தோறும் 783.

பரத்த - பரத்தையரோடு செல்கின்றவரே 1311.

பரிதல் - வருந்துதல் 1243.

பரந்து - அலைந்து 1062.

பரிந்து - வருந்தி 88, 132; கூறுபடுத்து 1172; வருந்தி 1243 ; இரங்கி 1248.

பரிந்தோம்பி - வருத்திப் பாதுகாத்து 88.

பரியது - உடற் பருமையுடையது 599.

பரியினும் - வருந்திக் காப்பாற்றினாலும் 376.

பரியும் - தொலைப்பன், நொலைக்கும், வெல்வன் (என் பரியும் என்பதை என்பு அரியுமெனப் பிரித்து எலும்பினையும் அரியும் எனப்பொருள் கொண்டனர் காளிங்கர்) 862. அஞ்சிநிற்கும் 502.

பருகுவன் - (புலன்களெல்லாவற்றினாலும்) அனுபவிப்பேன் 1266.

பருகுவார் - குடிப்பார் 811.

பருவத்து - காலத்து 218, 490.

பருவந்து - (வறுமையால்) வருந்தி 83.

பருவம் - காலவரையறை 1028.

பருவரல் - வருத்தம் (அறி. 119), 1197, 1240.

பருவரார் - வருந்தமாட்டார் 1126.

பல - அநேக 140......

பலர்நாண - பலர் (முன் நான்) நாணும்படி 1149.

பல் - பல 242......

பல்குஉரைத்துன்பம் - இரப்பார்க்கு உரைக்கத் துன்பம் (மணக்) 1045.

பல்லவை - பல நூல்களை 728.

பல்லார் - பலர் 191......

பலவாற்றல் - பலவகைகளால் 242.

பல்மாயக் கள்வன் - பல பொய்களையும் பேசவல்ல கள்வன் 1258.

பழகிய - பழையதாய் வந்த, பழமையான 803, 937.

பழகுதல் - கொண்டாடுதல், பயிலல் 785.

பழம் - தொன்றுதொட்டு வருகின்ற 955.

பழி - தீச்செயல் 40, 44; பிறர் பழித்தற்குரியது 62, 137; குடிப்பழி 145, 146, 172, 186, 433......; குற்றம், தவறு 1285.

பழிஅஞ்சி - பாவத்துக்குப் பயந்து (பொருளீட்டி) 44.

பழிக்கும் - இகழப்படும் 656.

பழித்தது - பழித்துக் களறிய ஒழுக்கத்தை 280.

பழியுள் - பழித்துக் கூறப்படுபவற்றுள் 186.

பழுதெண்ணும் - தீங்குசெய்ய எண்ணும் 639.

பழுத்து - கனிந்து 216, 1008.

**பா**

பாக்கியத்தால் - நல்வினையால், புண்ணியத்தால் 1141.

பாடற்கு - பாடல் தொழிலோடு, பாடலோடு (மணக்-உரை) 573.

பாடு - பெருமை 409, 597, 768, 1322. ஆண்மை, பெருமை (மணக்) 906, பெருமை அழகு (மணக்) 1237, நெறிப்பாடு 995.

பாத்தி - பயிர் விளைவிப்பதற்கு வரம்பிட்டுக் கட்டும் பாத்தி 465, 718.

பாத்து - பகுத்து 44, 227, 1107.

பாம்பு - நாகம் 890, இராகு 1146.

பாய்பவர் - குதிப்பவர் 1287.

பாராட்டுதல் - கொண்டாடுதல் 521.

பாராட்டும் - கொண்டாடும் 994.

பாராட்டுவானை - பலகாலும் சொல்லுவானை 196.

பாரிக்கும் - வளர்க்கும் 851.

பாரித்து - விரித்து 193.

பாரிப்பார் - பரப்புவார் 916.

பார் - வன்னிலம் 1068.

பார்க்கும் - ப்ார்த்து நெருங்கிவரும் 1186.

பார்த்து - நோக்கி 86, 487, சீர்தூக்கி, கண்டு, எண்ணி 676.

பார்ப்பார் - காண்பவர் 285.

பார்ப்பான் - அந்தணன், கோயிற் பார்ப்பான் 134.

பார்வல் - பார்வை 1152.

பால - தன்மையுடையவை, கூறுடையவை, பகுதி-யின 342, 378, 437, 672.

பாலவை - பொருள்கள் 659.

பாலால் - கூறுபாட்டால் 279.

பாலொடு - பாலுடன் 1121.

பால் - பகுதி 111, பக்கம் 118, ஊழ்வினை 376, இடத்தில் 422, வகை 533, பகுதி 950, 999, பசுவின் பால் 1000.

பாவம் - தீவினை 186.

பாவாய் - பெண்ணே 1123.

பாவி - கொடியது 1042.

பாவை - பதுமை 407, 1020, 1058.

பாழ் - கெடுதலாக 735.

பாழ்படுதல் - கெடுதல் 83.

பாற்கண் - பால்+கண் — நிலத்தில் 78.

பாற்று - பகுதியது 11, தன்மையது 82, 515, 871.

## பி

பிடித்து - பிடியளவு 1037.

பிணம் - சவம் 913.

பிணி - நோய் 227, 734, 738, 949, 1014.

பிணி அன்றோ - (கண்டார்க்கு) நோய்போல் பொறுத்தற்கரியதாம் 1014.

பிணிக்கு - நோயைத் தீர்ப்பதற்கு 1102.

பிணிக்கும் - கூட்டா நிற்கும் 570, கவரச் செய்யும் 643.

பிணை - பெண்மான் 1085, 1089.

பிரிதல் - நீங்குதல் 394, 955.

பிரிப்பர் - பிரியப்பண்ணுவர் 187.

பிரியலம் - பிரியமாட்டோம் 1315.

பிரிவாற்றி - பிரிவுக்குப் பொறுத்து 1160.
பிரிவு - நீங்குதல் 1152......, செலவு 1155......
பிழை - குற்றம் 535.
பிழைத்த - தவறிய 772.
பிழைத்தது - தப்பியது 779.
பிழைத்து - தவறு செய்து 896.
பிழையாது - தவருது 307.
பிற - வேறு, 34, 61, 95, 213, 300, பிறிதொன்று, மாருன இயல்புடையவை 1102, அசைநிலை 1181, 1184.
பிறஆழி-(அறமல்லாத) பாவக்கடல், பிறவிக்கடல் 8.
பிறக்கும் - பிறத்தற்கு ஏதுவாகிய 1044.
பிறங்கா - உண்டாகாத, மிகாத 62.
பிறங்கிற்று - உயர்ந்தது, விளங்கும் 23.
பிறப்பின் - பிறப்பில் 1315.
பிறப்பு - பிறவி 351. தோற்றம் 62, 107,369; குடிப் பிறப்பு 133, 134.
பிறப்பென்னும் - பிறப்புக்குக் காரணமென்னும் 358.
பிறர்பழி - பிறர்க்கு வரும் பழிக்கு 1015.
பிறவாமை - பிறவாதிருத்தல் 362.
பிறவி - பிறத்தல் 10.
பிறவினை - பாவச் செயல்கள் 321.
பிறவும் - பிறர் பொருளையும் 120.
பிறற்கு - மற்றவனுக்கு 149.
பிறனியலாள் - பிறனுக்குரியவள் 147.
பிறன் - மற்றவன் 49, 141......
பிறன்கடை - அயலவன் தலைவாயில் 142.

## பீ



## பு

புகழ்ந்தவை - புகழ்ந்து கூறப்பட்ட செயல்கள் 538.
புகழ்மை - புகழுடைமை 533.
புகுத்திவிடும் - அடைவித்துவிடும் 608, 616.
புகும் - எய்தும், செல்லும் 346.
புக்கில் - இருக்கும் வீடு 340.
புக்கு - புகுந்து 835, 996.
புடை - பக்கம் 1187.
புணரின் - கூடுமாயின், நட்புச் செய்யின் 308.
புணர்ச்சி - ஒரே தேயத்தவனுதல், நட்பாதல் 785; சேர்க்கை 887.
புணர்தல் - சேர்க்கை, கூடல் 1109.
புணர்வு - சேர்தல் 1155.
புணை - தெப்பம் 306, 1134, 1164.
புதல் - சிறு செடி, புதர் 274.
புதல்வர் - புத்திரர் (அதி. 7).
புதை - அம்புக்கட்டு 597.
புத்தேளிர் - தேவர் 58.
புத்தேளுலகு - தேவருலகு 213, 234, 290.
புத்தேள் - தேவர் 213, 234.
புயல் - மழை 14.
புரந்தார் - ஓம்பின அரசன், ஆண்டவன் 780.
புரளவிடல் - கழியவிடுக, போகவிடுக 755.
புரிந்த - விரும்பிய 59, 511, 994, மிக்க 977.
புரிந்தார் - விரும்பினர் 287.
புரிந்தார்மாட்டு - விரும்பியவரிடத்து, தோத்திரம் செய்கிறவரிடத்து 5.

புரிந்து - விரும்பி 143; பொருந்தி 541; மிகச்செய்து 607.

புருவம் - கண் புருவங்கள் 1086.

புரை - குற்றம் 292, அறிவு, உயர்வு 919.

புலத்தகை - புலவி மிகுதியாகும் தன்மை 1305.

புலத்தக்கனள் - புலக்கத் தக்கவளானுள், புலந்தாள் 1316.

புலத்தார் - உலகத்தார், இடத்தின் கண்ணுள்ளவர் 43.

புலப்பை - புலன்களை 343, புலப்பாய் 1301.

புலந்து - வெறுத்து 1039, பிணங்கி 1246, 1287.

புலந்துரையாய் - புலந்து கூடாது கண்டமாத்திரத்தே கூடுவாய் 1246.

புலப்பல் - பிணங்குவேன் 1259.

புலப்பேன் - பிணங்குவேன் 1267.

புலம் - விளைநிலம் 86, புலன்கள் 174, அறிவு 407, நூற்பொருள் 716.

புலம்பல் - தனிமையுறல் (அதி. 121).

புலவரை - தேவரை 234 (புலவரென்ருர் தேவரை அவர் புலனுடையராதலால்-மணக்குடவர்).

புலவி - பெரிய பிணக்கம் 1306, 1309.

புலவி நுணுக்கம் - புலத்தற்குக் காரணமில்லாதிருப்பவும் ஒரு நுண்ணிய காரணமிருப்பதாகக் கொண்டு தலைவி தலைவனேடு புலத்தல் (அதி. 132.)

புலன் - புலன்களால் நுகரப்படுவன 1101.

புலால் - ஊன் 257, 260.

புலி - வேங்கை 273, 599.

புலை - புலாலுண்ணும் தொழில் 329.

புல் - புன்மை, கீழ்மை 331, 719, 846, 914, 915, 916.

புல்சொல் - இகழ்ச்சிச் சொல் 189.

புல்லாது - தழுவாது 1301.

புல்லார் - பொருந்ாதவராய் 755.

புல்லாள் - தழுவாதவளாய் 1316.

புல்லி - தழுவி 1187, 1324.

புல்லினேன் - தழுவிக்கொண்டேன் 1259.

புழுதி - மண், தூசி 1037.

புள் - பறவைகள், புள் என்னும் பறவை 274.

புறத்த - இன்பத்துக்குப் புறம்பானவை, துன்பங்கள் 39.

புறத்ததாக - வெளியே இருக்க 82.

புறத்தாற்றின் - புறவழிகளில் (துறவறத்தில்) 46.

புறப்படுத்தான் - வெளிப்படுத்தினவன் 590.

புறம் - காணாத பிற இடம் 181, 183, 185; வெளியிடம் 277, உடம்பு 298; வெளிப்பட 487; பிறர் 549; எதிர்முகம் 924; பகைவரிடத்து 933.

புறன் - காணாதவிடத்து 182; பிறர் நீங்கின அளவு 189.

புற்கென்ற - மங்கிப்போயின (மங்கிப்போதல் வழிபார்த்தலால்) 1261.

புற்கை - கூழ், கஞ்சி 1065.

புனல் - நீர் 737, 1134, கடல் 1167, நீர் 1287.

புனை - அணிந்த 407, விலங்கு 836.

## பூ



## பெ

பெரியர் - பெருமையுடையவர் 26, 160.

பெரியார் - பெருமையுடையவர் 444, 680, 694, 896.

பெரு - மிக்க 380.

பெருகலின் - வளர்த்தலின் 811.

பெருகும் - வளரும் 96. பெருகும் 604.

பெருக்கத்தின் - செல்வத்தின் 170.

பெருக்கத்து - நிறைந்த செல்வம் உளதாய வழி 963.

பெருக்கம் - செல்வம் 115, 431.

பெருக்கி - அதிகப்படுத்தி 512.

பெருக்கற்கு - வளர்ப்பதற்கு 251.

பெருந்தகைமை - பெருஞ்சிறப்பு 1255.

பெருந்தகையான் - பெருந்தன்மையுடையவன் 217.

பெருந்தக்க - மேம்பட்ட பொருள் 54.

பெருந்தக்கது - பெரிய தகுதியையுடைய பிறப்பு 1137.

பெருமழைக்கண் - குளிர்ந்த பெரிய கண்கள் 1239.

பெருமித - மேம்பாட்டின் 431.

பெருமிதம் - செருக்கு 979.

பெருமை - உயர்வு 21......நிலையாமை மிகுதி 336, பெருந்தன்மை 979.

பெரும் - மிக்க 10......

பெருவலி - மிக்க வலிமையுடையவை 380.

பெறல் - அடைதல் 213, அறிதல் 1180.

பெறுஅது பெற்றமை - பெறும்லிருக்கும்போதே பெற்றதுபோன்ற 1143.

பெறுஅமை - (காதலரை) பெறுமை 1295.

பெறுவிடின் - அடையாவிட்டால் 238.

பெறின் - அடைந்தால் 54......
பெறுகுவம் - அடைவோம் 1328.
பெறுதி - அடைவாய் 1237.
பெறும் - அடையும் 61, 768, 1322.
பெறுவது - கிடைக்கும் விலை 813.
பெற்ற - அடைந்த 524, 1000, 1109.
பெற்றக்கால் - பெற்றாலும் 1270.
பெற்றம் - பசு 273.
பெற்றன்ன - பெற்றாற்போலும் 1143.
பெற்றான் - கணவன் 58.
பெற்றியார் - தன்மையுடையவர் 442.
பெற்றேம் - அடைந்தேம் 626.

## பே

பேஎய் - பேய் 565.
பேடி - அலி 614, 727.
பேணப்படும் - விரும்பிக்கொள்ளப்படும் 866.
பேணலர் - விரும்பார் 1016.
பேணா - இகழும், விரும்பப்படாத 924.
பேணாது - உதவாது 163, 902; அவமதித்து 892; விரும்பாமல் 902, 1178; அவமதித்து 1283.
பேணாமை - விரும்பப்படாமை 833, பகைமை 866.
பேணி - உணவு முதலியவற்றால் உபசரித்து 56; பாதுகாத்து 120; உவப்பன செய்து 442, 443, 633, 976.
பேணியார் ; காதலர் 1257.

பை

## பொ

பொருள்தீர்ந்த - *பயனில்லாதவற்றை* 199.

பொல்லாத - *தீயவற்றை* 176.

பொழுதின் - *காலத்திற் காட்டிலும்* 69, *நேரத்தின் கண்* 1105.

பொழுது - *நேரம்* 337, 481, 1215, *பொழுதே* 1221, *மாலைப்பொழுது அதி.* 123.

பொழுதும் - *உம்மை இழிவு சிறப்பும்மை* 337.

பொள்ளென - *சடுதியில்* 487.

பொறி - *மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள்* 6.

பொறி - *விதி, புண்ணியம்* 6.

பொறுத்த - *சுமந்த* 239.

பொறுத்தல் - *தாங்குதல், மன்னித்தல்* 151, *மன்னிக்க* 152.

பொறுத்தாரை - *பொறுமையுடையவரை, பிறர் செய்த தீமையைப் பொறுத்துக்கொண்டவரை* 155.

பொறுத்தான் - *சுமந்தவன்* 37.

பொறுத்தும் - *மன்னிக்கும்* 579, *தாங்குதலால்* 1032.

பொறேன் - *தாங்கமாட்டேன்* 1247.

பொறை - *பிழை பொறுத்தல்* 153......*சுமை* 189, 570.

பொறை ஆற்றுவார் - *சுமையைத் தாங்குவார்* 1027.

பொன் - *தங்கம்* 155, 267, *இரும்பு* 888, 931.

பொன்று - *அழிவில்லாத* 36.

பொன்றுது - *இறவாமல்* 233.

பொன்றி - *கெடுத்து* 171.

பொன்றும் - அழியும் 156
பொன்றும் கால் - இறக்கும்போது 36.
பொன்றும் துணையும் - (உலகம்) அழியும் வரையும் 156.

## போ

போஒம் - போய்விடும் 1070.
போஒய் - சென்று 46, விட்டு நீங்கி 933.
போகவிடல் - கைவிடல் 831.
போகா - தம்மை விட்டு நீங்கிப் போகா 376.
போகாது - படாதது 764.
போகு ஊழால் - போதற்குரிய ஊழினால் 371.
போக்கி - செலுத்தி 774.
போக்கும் - (அச்செல்வம்) போதலும் 332, உம்மை எச்ச உம்மை.
போதாய் - (நீ அங்கு நின்றும்) போவாய் 1123.
போது - மொட்டு, பெரிய அரும்பு 1227.
போம் - போகும், தொலையும் 659.
போர் - சமர் 758, 767.
போர்த்த - மூடப்பட்ட 80.
போர்த்து - மேலே மூடி 273.
போல - ஒப்ப 75, 151......
போலும் - இரண்டாவது போலும் உரையசை 1228, போல நின்றன 1232.
போல் - ஒப்ப—59, 118.........
போல்க - ஒத்திருக்க 691.
போழ - நுழைய, நுழைந்ததாக 1239.

ம

மல்லல் - செழிப்பு, வளம் 245.

மழலை - குதலை, நிரம்பாச் சொல் 66.

மழித்தல் - தலையை முண்டிதஞ் செய்து கொள்ளுதல் 280.

மழை - கண்ணீர், குளிர்ந்த 1239.

மறக்கலா - மறக்க முடியாத 1297.

மறத்தல் - மறந்துவிடுதல் 32, ஒழிக 303, நினைவொழித்தல் 303.

மறத்திற்கு - தீமையை ஒழிப்பதற்கு 76.

மறந்தார் - மறந்துபோயினார் 263.

மறந்தீர் - நினைத்திலீர் 1316.

மறப்பது - மறத்தல் 108.

மறப்பின் - மறந்தேனாயின் 1125.

மறப்பின் எவனாவன் - (அவ்வின்பத்தை) மறந்தால் யான் எவ்வாறுவேன் 1207.

மறப்பு - மறத்தல் 1125, 1207.

மறம் - வீரம் 766.

மறவர் - வீரர் 778.

மறவற்க - மறவாதிருக்க 106.

மறவி - மறதி 605.

மறன் - வீரம் 384.

மறு - கறை, களங்கம் 1117.

மறுகு - வீதி, தெரு 1139.

மறுகும் - சுழலுகிறது 1139.

மறுத்தானை - நீக்கியவனை, தவிர்த்தவனை 260.

மறுத்து - மீண்டு 312, ஒழித்து 945.

மறுத்து உண்ணின் - உடம்பு வேண்டும் அளவுக்கன்றி நோய் வாரா அளவுக்கு உண்ணின் 945.

மறுமை - மறுபிறப்பு, சுவர்க்கம் 98, 459, 904, 1042.

மறுமை இலாளன் - மறுமைப் பயனில்லாதவன் 904.

மறை - மந்திரம் 28, இரகசியம் 590, 695, உபதேசம் 847, மறைத்தல், ஒழித்தல் 1138, 1076, 1180.

மறை இறந்து - மறைவாயில்லாமல் 1138, 1254.

மறைக்கும் - மூடிவைக்கும் 980.

மறைத்திர் - மறைக்கலுற்றீர் 1338.

மறைந்தவை - மறைவான செயல்கள் 587.

மறைந்து - மறைவாகவிருந்து 274, 278.

மறைப்பான் - வராமற் காக்க முயல்பவன் 1029.

மறைப்பேன் - ஒளிப்பேன் 1161, 1253.

மறைமொழி - மந்திரம் 28.

மறையா - இலவாக்காத 846.

மற்றையவை - இஃது அல்லாத மற்றைய செல்வங்கள் 400.

மற்ற - பிற 39.

மற்றின்பம் - பேரின்பம், மறுமை இன்பம் 173.

மற்று - வேறு 173, 221, 380, 588, 591, 1033, மீண்டு 356, பின்னும் 344, 354, 373, 540; அசைநிலை 30, 36, 60, 95, 205, 323, 596, 773, 802, 905, 1122, மற்றவை வினைமாற்றின்கண் (ஆனால், பின், அவ்வாறன்றி என்னும் பொருள்களில்) வந்தவை.

**மற்றுமருந்தோ** - *சாகாமைக்கு மருந்தோ (ஆகமாட்டாது சாகவேண்டும்)* 968.

**மற்றும்** - *பின்னும்* 373.

**மற்றுஎன் (என்மற்று)** - *இனி அவ்வாறு சென்று மானங்கெடுவது எதற்காக* 966.

**மற்றையவர்** - *பிறர்* 348.

**மற்றையவர்கள்** - *பிறர் (துறந்தவர்)* 263.

**மற்றயவை** - *அல்லாத பிற* 400.

**மற்றையார்** - *பிறர்* 365.

**மற்றையான்** - *பிறன் (அவ்வாறு செய்யாதவன்)* 214.

**மற்றொன்று** - *(ஊழை விலக்குவதற்கு) ஒரு உபாயத்தை* 380.

**மனக்கவலை** - *மனத்துயரம்* 7.

**மனத்தது ஆக** - *மனத்திலிருக்க* 278.

**மனத்தான் ஆம்** - *மனத்தினின்று வரும்* 93.

**மனம்** - *உள்ளம்* 453, 455, 456, 822, 823, 884.

**மனை** - *இல்லறம்* 51, 52, *மனைவி* 60, 148, 901, 1268.

**மனைக்கெழீஇ** - *வீட்டில் (தனிமையில்) உறவுகொண்டு* 820.

**மனைத்தக்க** - *இல்லறத்துக்குத் தகுந்த* 51.

**மனைமாட்சி** - *இல்லறத்துக்குத் தக்க நற்செய்கைகள்* 52.

**மனைவிழைவார்** - *தம் மனையாளை விரும்பி அவள் சொற்படி நடப்பவர்* 901.

**மன்** - *ஆக்கம்* 1329, *மிகுதி* 1138, *நிலைபேறு* 68, 244, 268, 318, 457, 1168; *அசைநிலை,* 819, 1016, 1046, 1064, 1327 *ஏனையவை*

ஒழியிசைகள். ஒழிபிசை - (சொல்லாது விட்ட சொற்களால் பொருளை இசைப்பது).

மன்ற - உறுதியாக, திண்ணமாக 143, 229, 649, 867, 880, 1136.

மன்றில் - சபையில் 820.

மன்னர் - அரசர் 692.

மன்னவன் - அரசன் 388, 445, 542, 546, 548......

மன்னன் - அரசன் 386, 448, 520, 544.

மன்ன - நிலைபெறமாட்டா 556.

மன்னுதல் - நிலைபெறுதல் 556.

மன்னும் - நிலைபெறும் 190.

மன்னுயிர் - நிலைபெற்ற உயிர்கள் 268.

மன்னோ - மன்னும் ஓவும்அசை 819.

மா

மா - பெரிய 68, 245, 526, 544, குதிரை 814, மான் 969, பெரிய 999, 1058. மாமை நிறம் 1107, கரிய 617.

மாஇரு - மிகப்பெரிய 999.

மாக்கள் - மனிதர் 329, 420.

மாசறு காட்சி - குற்றந் தீர்ந்த அறிவு 352.

மாசு - குற்றம், அழுக்கு 34, 106, 199, 278, 311, 312, 352, 601, 646, 649, 800, வசை 956,

மாஞாலம் - பெரிய பூமியிலுள்ளார் 1058.

மாடு - செல்வம் 400.

மாட்சி - சிறப்பு, நற்குண நற்செய்கைகள் 52, 60, 750.

**மானம்** - *நிலைதவறுதிருக்கும் போராண்மை* 384, *வணங்காமை; தாழ்வின்மை* 969, 970, 1028, *தன்னிலை தாழ்வு வந்தால் உயிர் வாழாமை. அதி.* 97.

**மானம் கருத** - *மானத்தை நினைப்பாராயின்* 1028.

**மானம்வரின்** - *மானம் அழியவந்தால்* 969.

## மி

**மிக** - *அதிகமாக* 829, 1007.

**மிகச்செய்து** - (*நட்பினை*) *அதிகம் செய்து* 829.

**மிக நலம்** - *மிக அழகு* 1007.

**மிகப்பட்டு** - *மேம்பட்டவனாக நினைத்து* 1074.

**மிகல்** - *மேல் மேல் ஊருதல்* 856.

**மிகல் ஊக்கும்** - *வெல்ல முயலும்* 855.

**மிகல் காணும்** - *மிகுதியும் நினைப்பின்* 859.

**மிகுதி** - *மிகையாயின, வேண்டப்படாதன, குற்றம்* 784.

**மிகுதியான்** - *மனச் செருக்கினால்* 158.

**மிகுத்து** - *பெருக்கி* 475.

**மிடும்** - *மேற்படும்* 373, *வெளிப்படும்* 928, 1161.

**மிகை** - *அதிகம்* (*வேண்டப்படாதது*) 345; *மிகுதியானவை* 504.

**மிக்க** - *அதிகமானவை* 504, 724.

**மிக்கவை** - *தீயவற்றை* 158.

**மிக்கற்றால்** - *மிகுந்தது போன்றது* 1302.

**மிக்கார்** - *தன்னிலும் அதிகம் கற்றவர்* 724.

**மிசை** - *மேலுலகம், வீட்டு உலகம்* 3.

**மீ**



**மு**

முன்னம் - முற்பொழுதில் 1277.

முனனர் - முன்னிடம் 435, 716.

## மூ

மூக்கு - முகத்தில் வெளியே நீண்ட பகுதி 277

மூடப்பட்டார் - விழுங்கப்பட்டார் 936.

மூத்த - முதிராத 441.

மூத்தற்று - முதுமையடைந்தது போலாகும் 1007.

மூவர் - பிரமசாரி, வானப்பிரத்தன், சன்னியாசி என்னும் மூவர் 41, மூன்று பேர் 589.

மூன்றன் - மூன்றினுடைய 360, 384.

மூன்றின் - மூன்றினோடு கூடிய 688.

மூன்று - 383.

## மெ

மெய் - உடம்பு 65; உண்மை 249, 300, 354, 355, 356; 423; உடம்பு 619; நீதி 857; உடம்பு 925.

மெய்ம்மை - மெய்கூறுதல் 952.

மெய்யறியாமை - மெய் மறத்தல், தன்னை மறத்தல், மயங்குதல் 925.

மெய்வேல் - மார்பில் பாய்ந்துகிடந்தவேல் 774.

மெலிந்து - நினைந்து, இளைத்து [அதி. 117]

மெலியார் - வலிகுறைந்தவர் 250, 861.

மெல் - மெல்லிய 1103, 1265.

மெல் நீரள் - மெல்லிய குணமுடையள் 1111.

மெல்ல - அளவுகடவாமல் 562, வெளிப்படாமல் 1094.

மே

**மை**



**மொ**



**மோ**



**யா**

யாக்கை - உடம்பு 79, 239. 942.

யாங்கணும் - எங்கும் 864.

யாங்கு - எங்கு, எவ்விடத்து 1070.

யாண்டு - எக்காலத்தும் 4, எவ்விடத்து 895.

யாண்டும் - எவ்விடத்தும் (ஐய்யுற்றுக் கைப்பற்றியும் சிறைப்படுத்தியும் வருந்தச் செய்யுமிடத்து) 585.

யாதனின் - எதனினின்றும் 341.

யாது - எது 178, 254......

யாந்தற்று - பிணித்தாற் போன்றது 678.

யாப்பினுள் - (அன்பாகிய) தளையுள் 1093.

யாப்பு - கட்டுதல் 777.

யாமத்து - இடையாமத்தில் 1136, 1252 அரையிருள் 1167 (யாமம் ஏழுரை நாழிகை கொண்டபொழுது).

யாம் - நாங்கள் 61, 300......

யாரின் - யாரைப் பார்க்கிலும் 1314.

யார் - எவர் 256, 447......

யார் மாட்டும் - எல்லாரிடத்தும் 94, 162.

யார் யார்க்கும் - எவ்வகை உயர்ந்தவர்க்கும் 20.

யாழ் - வீணை 66, 279.

யானை - ஆனை 599, 678, 758, 772.

யானையால் - யானையைக்கொண்டு 678.

யான் - நான் 116...

வ

வகுத்த - விதித்த 377.

**வகுத்தலும்** - பகுத்தலும் (பிரித்துச் செலவு செய்தலும்) 385.

**வகுத்தான்** - ஊழ், தெய்வம் 377.

**வகை** - தன்மை, கூறுபாடு 23, 27, 377, 465, 514, 709; உரிய 953.

**வகை மாண்ட** - எல்லா வகையாலும் அழகுபெற்ற 897.

**வசை** - பழிப்பு 238, 239, 240.

**வஞ்ச** - கபடம், கள்ளம் 271.

**வஞ்சிப்பது** - கெடுப்பது 366.

**வடு** - தழும்பு 129; பழி 549; தாழ்வு 689; பழி 1079.

**வட்டாடுதல்** - கட்டையுருட்டல் 401.

**வணக்கம்** - வளைவு 827.

**வணங்கா** - பணியாத 9.

**வணங்கிய** - பணிந்த 419.

**வண்** - வளப்பமான 239.

**வண்ணம்** - நிறம் 714.

**வந்த** - போந்த, நேர்ந்த 569, 609, 754, 764...; கேடுகள் வந்தவற்றை 807.

**வந்தது** - இழிவானது 1066.

**வந்தவிடத்து** - வந்த சமயத்தில் 968.

**வந்தாளை** - வந்த சுற்றத்தவனை 530.

**வயிற்றுக்கு** - 412.

**வயின்** - இடம் 846.

**வரல்** - வருதல் 1205, 1263.

வரவு - குடிப்பிறப்புக்குரிய ஒழுக்கம் 1043, வருகை 1151, 1165, 1264.

வரன் - மிக்கது 24.

வரிசை - தகுதிக்கேற்ற தன்மை 528.

வரு - வந்த 83, பின்செல்லக்கடவ 86, வரக்கடவதாகின் 435, 737, வரக்குறித்த 1269.

வருக - வருவானாக 1266.

வருத்த - வருத்தத்தின் 619.

வருத்தம் - முயற்சி 468.

வருப - வருஞ்செயல்கள் 961.

வரும் - வந்தடையும் 63...

வரை - அளவு 480.

வரைத்து - அளவை உடையது 105.

வரையாள் - எல்லையில் நிற்பவள் 150.

வரையான் - உரிமையாகச் செய்யாதவன் 150.

வரைவின் மகளிர் - விலைமாதர்களோடு கலந் தொழுகலால் வருங் குற்றம் [அதி. 92.]

வரைவு - (உயர்ந்தோர் இழிந்தோர் என்னும், வரம்பு 919.

வலி - வலிமை 273, வலிமையுடையவன் 380, வலிமை 471, 473, 1131.

வலியறிதல் - உபாயங்களுள் தண்டத்தைக் குறித்த அரசன் நால்வகை வலியையும் அளத்தல் (அதி. 48.)

வலியார் - (தன்னிலும்) வலியவர் 250.

வலை - கண்ணி 348.

வலைப்பட்டார் - வலையில் பட்டவராவர் 348.

வள - வருவாய்க்கு 51; செல்வத்தினது 480.

வளத்தக்காள் வாழ்க்கை - வரவுக்குத் தக்க செலவு செய்து வாழ்கின்றவளின் வாழ்க்கை 51.

வளம் - பயன் 14; செல்வம் 512, 736, 739.

வளர - மிக, முதிர 1223.

வளர்வதன் - வளர்கின்றதன் 718.

வளா - பரப்பு 523.

வளி - காற்று 245; வாதம் 941; காற்று 1108, 1239.

வளை - சங்கு வளையல் 1157, 1277.

வள்ளி - கொடி 1304.

வள்ளியம் - கொடையுடையேம் 598.

வறக்குமேல் - வறண்டுபோனால், பெய்யாதாயின் 18.

வறங்கூர்ந்து - வறட்சியடைந்து 1010.

வறம் - வறுமை 1010.

வறியார்க்கு - ஒரு பொருளுமில்லாதவருக்கு 221.

வறுமை - சிறுமை, பொருளின்மை 769, 934.

வற்றல் - உலர்ந்தது 78.

வற்று - வல்லது 587, 1079.

வன் - வலிய 78, 99, 228.

வன்கணவர் - கொடியவர் 228.

வன்கணவன் - வலிமையுடையவன் 689.

வன்கணார் - வலிய நெஞ்சையுடையவர் 1198.

வன்கண் - உறுதிப்பாடு 632, 762.

வன்கண்ணார் - வீரர் 1027.

வன்சொல் - கொடுஞ்சொல் 99.

வா

## வி

விசும்புளார் - *தேவர்* 25.

விடல் - *விடுக* 113, 158, 517, 697, 785, 818, 830, 876, 912, 961 ; *நீங்குதல், விடுதல்* 203, 314, 343, 450, 797. 831, 979, 1245, 1302, 1303.

விடாஅ - *நீங்கா* 347 ; *விடாமைக்கு ஏதுவாகிய* 1324.

விடாஅ தவர்க்கு - *துறக்காதவருக்கு* 347.

விடா அது - *இடைவிடாதிருந்து* 1210.

விடில் - *விட்டு நீங்கினால்* 1159.

விடுக - *ஒழிக* 928.

விடுமாற்றம் - *சொல்லிவிட்ட மொழி* 689.

விடும் - *மிகும்* 267, *நீங்கும்* 167.

விடுவார் - *விட்டு நீங்குபவர்* 799.

விட்டக்கால் - *அடங்காது சொன்னால்* 695.

விட்டேம் - *துறந்தேம்* 1036.

விண் - *மழை* 13.

விண்ணின்று பொய்ப்பின் - *விண் நின்று பொய்ப்பின் எனவும் விண் இன்று பொய்ப்பின் எனவும் இருவகையாகப் பிரித்துப் பொருள் கொள்ளப்படுவதுண்டு* 13.

விதிரார் - *உதறமாட்டார்* 1077.

விதுப்பு - *விரைதல்* 1290, *அதி.* 118.

விதுப்புற்று - *விரைந்து* 1290.

விதும்பல் - *விரைதல் அதி.* 127, 129.

வித்தகர் - *அறிஞர், சமர்த்தர்* 235.

வித்து - *விதை* 24, 85, 361 ; *காரணம்* 138.

வியந்தான் - *மெச்சிக்கொண்டவன்* 474.

### வீ

## வெ

**வெண்மை** - *புல்லறிவாண்மை, அற்ப புத்தி* 844.
**வெம்** - *கொடிய* 895.
**வெம்கோல்** - *கொடுங்கோல்* 563.
**வெயர்ப்ப** - *வேர்வை உண்டாக* 1328.
**வெயில்** - *ஞாயிற்றின் ஒளி* 77.
**வெய்து** - *விரைவில்* 569, *சூடான (உணவு)* 1128.
**வெருவந்த** - *அஞ்சிய, அஞ்சத்தக்க* 563, *அதி.* 57.
**வெருவந்து** - *அஞ்சி* 569.
**வெரூஉம்** - *அஞ்சும்* 599.
**வெல்படை** - *(பகைவரை) வெல்லத்தக்க சேனே* 761.
**வெல்லும்** - *வெற்றிகொள்ளும்* 481, 495, 769, *வெல்ல வல்ல* 645.
**வெல்வது** - *வெற்றிகொள்வது* 748.
**வெளிப்படும்** - *அலராகும்* 1145.
**வெளியார்** - *அறிவிலார்* 714.
**வெறிறு** - *அறியாமை* 503.
**வெள்ள** - *வெள்ளமாகிய* 1170.
**வெள்ளத்தனைய** - *அளவற்ற* 622.
**வெள்ளநீர்** - *வெள்ளமாகிய நீரில் (கண்ணீரில் புகுந்து நீந்த)* 1170.
**வெறி** - *நன்மணம்* 1113.
**வெறிய** - *அறிவற்றசெயல்* 175.
**வெறுக்கை** - *மிகுதி* 600, *செல்வம்* 761, *மிகுதி* 971.
**வெறுத்தக்க** - *நிலையுடைய ; செறியத்தக்க* 993.

### வே

**வேரார்** - கோபிக்க மாட்டார்; வெருளமாட்டார் 487.

**வேர்ப்பர்** - வெருள்வர் 487.

**வேலாருள்** - வேலையுடைய வேற்றரசரிடை 683.

**வேலி** - பாதுகாப்பு 1016.

**வேலை** - வேற்படையாயிருந்தாய் 1221.

**வேல்** - எறியீட்டி, வேலாயுதம் 500; படைக்கலம் 546.

**வேள்** - உதவி 81, உபகாரியாந் தன்மை 613, 614, ஒப்புரவு 212.

**வேள்வி** - யாகம் 87, 88.

**வேறு** - பிறர் 143, 926, 1209. கூறு 374, மாறுபாடு 514, 519, 822, பிறிது 600, மாறுபட்டவர் 704, தனிச்சிறப்பு 1012, மாறும் 822, மாறாக இருப்பவர் 819.

**வேற்றுமையான்** - மாறுபாட்டினால் 972.

## வை

**வை** - வைக்கோல் 435.

**வைகல்** - நாடோறும் 83.

**வைக்க** - கருதப்படும் 50, 214, 388, 850.

**வைக்கும்** - இருத்தும் 776.

**வைத்தான்** - சேமித்துவைத்தானாக 1001.

**வைத்து** - ஈயாமல் சேமித்து 228, நினைந்து 1269, இட்டாற் (போன்ற) 840.

**வைப்பர்** - கொள்வர் 155.

**வைப்பிற்கு** - நிலத்திற்கு 24.

**வைப்பின்** - உலகத்தில் 149.

---

# திருக்குறள் ஆராய்ச்சி

## திருவள்ளுவர்

இற்றைக்கு இரண்டாயிரமாண்டுகளின் முன் விளங்கிய தனிப்பெரும் புலவர் திருவள்ளுவர். பண்டைத் தமிழ் அரசர் சபையில் உயர் அதிகாரம் பெற்று விளங்கிய கருமத்தலைவர்களுள் ஒருவர் வள்ளுவன் எனப்பட்டார். வள்ளுவன் யானை-மீது வீதிகளிற் சென்று அரசகட்டளையை மக்களுக்கறிவித்தான். வள்ளுவனுடைய கடமை இஃதாதலைப் பண்டைத் தமிழ் நூல்கள் குறிப்-பிடுகின்றன. தமிழரசர் வலியிழுந்து ஒடுங்கிய காலத்தில் பண்டை மரபுகள் சில மறைந்து போயின. பிற்காலத்தில் சாம்பவர் குலத்தினர் அரசகட்டளைகளைப் பறை அறைந்து மக்களுக்கு உணர்த்தி வந்தனர். அவ்வழக்கு இன்றும் நிலை பெறுகின்றது. இவர்கள் உபசார முறையில் வள்ளுவரெனப்பட்டனராகலாம். பிற்காலத்தில் வள்ளுவரென்னும் பெயர் சாம்பவர் குலத்தின-ரைக் குறிப்பதாகவிருந்து வருகின்றது. திரு-திருவள்ளுவர் பண்டைத் தமிழரசர் காலத்தில் வள்ளுவன் என்னும் கருமாதிகாரியாக இருந்தவ-ரென்பது அறிஞர் கருத்து.

வள்ளுவரைப் பற்றிய வரலாறுகள் அனைத்தும் மறக்கப்பட்டு விட்டன. வள்ளுவர் சாம்பவர் குலத்தைச் சேர்ந்தவர் என்னும் ஐதீகத்தை நம்பிய

பிற்காலத்தவர் அவரைக் குறித்துக் கற்பனைச் செய்திகளைப் புனைவாராயினர். வள்ளுவரின் இயற்பெயர் மறக்கப்பட்டு விடப்பட்டபடியால் அவர் உத்தியோகப் பெயரால் அறியப்பட்டார். இன்றும் பலர் இவ்வாறு அறியப்படுதல் மரபு.

வள்ளுவர் மயிலாப்பூரில் பிறந்தாரென்னும் ஐதீகமிருந்து வருகிறது. ஏறக்குறைய நூற்றைம் பது ஆண்டுகளின்முன் கற்சிற்பி ஒருவர் தமது மனக்கண்ணுக்குத்தோன்றிய வண்ணம் வள்ளு-வர் உருவச்சிலையை மயிலாப்பூரில் அமைத்து வைத்தார். இது பற்றித் திருவள்ளுவர் மயிலையிற் பிறந் தாரென்னும் ஐதிகம் தோன்றியிருக்கலாம். திருவள்ளுவர் வரலாற்றைக் கூறும் கபிரகவல் என்பது சென்ற நூற்றூண்டிஇறுதியில் வாழ்ந்த விசாகப் பெருமாளையர், சரவணப் பெருமாளையர் என்போரால் செய்யப்பட்டதென நம்பப்படுகிறது. திருவள்ளுவர் வாசுகியை மணந்தது, நெசவு தொழிலைக் கைக் கொண்டிருந்தது போன்ற செய்திகளும் நிலவுகின்றன. சங்ககாலத்தில் திருவள்ளுவரின் புகழ் ஓங்கியிருந்தது. மணி-மேகலை சிலப்பதிகாரம் முதலிய இரட்டைக் காவியங்கள் இவரைக் குறிப்பிடுகின்றன.

## திருக்குறள்

சங்ககாலப் புலவர்கள் திருக்குறளடிகளை எடுத்து ஆண்டுள்ளார்கள். சங்ககாலம் முதல்

திருக்குறளடிகள் தமிழ்ப்புலவர்களால் தமது நூல்களில் எடுத்து ஆளப்பட்டு வந்துள்ளன. மேல்நாட்டினர் இந்தியாவுக்கு வரத் தொடங்கிய பின் அவர்களிற் பலர் தமிழைக்கற்றுத் திருக்குறளைப் படித்தறிந்து அதனை இலத்தின், சேர்மன். ஆங்கிலம் முதலிய மொழிகளில் மொழிபெயர்த்து அதன் சிறப்பை மேல் நாட்டினருக்கு உணர்த்தினர். எம்மொழியிலும் இதற்கிணையான நூலில்லை யென்பது திருக்குறளையும் பிறமொழி நூல்களையும் ஆராய்ந்த எல்லா அறிஞர்களின் துணிவாகும். திருக்குறள் எல்லாமதத்தினரும், எல்லா நாட்டினரும் ஏற்றுக் கொள்ளும் வகையில் பொதுநூலாக அமைந்துள்ளது. ஆகவே திருக்குறளைக் கற்று ஆராய்ச்சி செய்த சைவர், வைணவர், சமணர், பௌத்தர், கிறித்தவர் முதலிய சமயத்தவர்கள் அது தத்தம் மதக் கருத்துக்களைக் கொண்ட நூல் எனக் கூறியுள்ளனர்.

## திருவள்ளுவர் சமயம்

சிவன், திருமால், முருகன், போன்ற பெயர்களைக் கடவுளுக்கு இட்டுக் அவரை ஆண்டான் எனக்கொண்டு வழிபடும்முறை மிகப்பழங்காலம் முதல் இவ்வுலகம் முழுவதிலும் இருந்துவருகின்றது. ஒவ்வொரு மதமும் வழிபடு கடவுள் தொடர்பான பெயர்பெறும். இவ்வழிபாடுகள் மக்களின் நாகரிகவளர்ச்சிக் கேற்பப்படிப்படியே செம்மை

பெற்று வந்துள்ளன. வழிபடப்படும் கடவுளின் பெயரால் அறியப்படாத சாங்கியம், பௌத்தம், சமணம், யோகம் போன்ற மதங்களும் காணப்படுகின்றன. இம்மதங்களெல்லாம் ஆதியிலிருந்த ஒரு தத்துவஞானக் கொள்கைகளின் ஒவ்வோர் பகுதியை முதன்மையாகக் கொண்டெழுந்தவை. உபநிடதக்கொள்கைகளை அடிநிலையாகக்கொண்டே சாங்கியம் முதலிய ஞானங்கள் எழுந்தனவென்று அறிஞர் கூறுவர். உபநிடதங்கள் இறை, உலகு, உயிர், பிறப்பு, இறப்பு, வினை, வினைப்பயன் . போன்றவற்றையும், ஆதிமுதல் சடத்தோடு சம்பந்தப்பட்டு வருகின்ற உயிர்கள் சடத்தை விட்டு நீங்கிப் பின் ஒரு போதும் அச்சடத்தைப் பற்றுது விடுதலை அடைந்து வீட்டு நிலை அடைவதைப்பற்றியும் ஆராய்வன. உபநிடதக் கருத்துகளே ஆகமங்களிலும் காணப்படுகின்றன. உபநிடத ஞானம் எல்லாச் சமயத்தவர்களுக்கும் பொதுவானவை. இஞ்ஞானங்கள் ஆரியர் இந்தியாவுக்கு வருதற்கு இரண்டாயிரமாண்டுகளின் முன் தமிழரிடையே பரவியிருந்தன என அறிஞர் கருதுகின்றனர். இத்தத்துவஞானங்கள் வேதங்களுக்குப் புறம்பானவை. உபநிடத ஞானங்களை அறிந்திருந்தோரும், சாங்கியம், பௌத்தம், சமணம் போன்ற மதங்களைத் தாபித்தோரும் பிராமணரல்லாத அரச வகுப்பினராவர். தமிழர் மதத்துக்கு சாதி உயர்வுதாழ்வும், வருணச்சிரம தருமங்களும் இருக்கவில்லை. பழமை தொட்டுவந்த

தமிழரது தத்து ஞானத்தைத் தழுவித்திருவள்ளு-வர் திருக்குறளை இயற்றினர். இது பற்றியே இவர் எம்மதத்தைச் சேர்ந்தவர் என்று கூறமுடியாமல-லிருக்கிறது. இவர் கடவுள், வினை, வினைப்பயன், மறுபிறப்பு, பாவம், புண்ணியம் போன்ற வற்றை ஏற்றுக்கொண்டவராகத் தெரிகிறது. சாங்கியம், பௌத்தம், சமணம், யோகம், வேதாந்தம், முதலிய மதக்கொள்கை களுக்கும் பகவத் கீதைக்கும் ஆதாரம் உபநிடதங்களென்று, ஆராய்சசியாளர் கூறுகின்றனர்.

## திருக்குறளின் காலம்

திருக்குறளின் காலத்தைப்பற்றிப் பலர்பலவாறு கூறியுள்ளனர். மணிமேகலையும் சிலப்பதி-காரமும் கி. பி. 2-ம் நூற்றூண்டைச் சேர்ந்த நூல்கள். இவை திருவள்ளுவரைக் குறிப்பிடுகின்-றன. ஆகவே, திருக்குறள் கி. பி. 2-ஆம் நூற்-ரூண்டுக்கு முற்பட்ட நூல் எனத் தெரிகின்றது. ஒரு நூல் தோன்றிப் புகழுடைவதற்குச் சில காலம் செல்லவேண்டும். திருக்குறள் கிறித்து-வுக்கு முன் முதலாம் நூற்ரூண்டில் அல்லது கிருத்துவுக்குப்பின் முதல் நூற்ரூண்டில் தோன்றி-யிருத்தல் கூடுமென அறிஞர் கூறுவர். மறை-மலையடிகள் கிறித்துவ ஆண்டு தொடங்குவதற்கு 30 ஆண்டுகளின் முன் திருவள்ளுவர் வாழ்ந்தா-ரெனக் கூறினர்கள். இக்கணிப்பை கொண்டே இன்று திருவள்ளுவர் ஆண்டு வழங்குகின்றது.

## திருக்குறளுரைகள்

மாணாக்கர் ஆசிரியரிடத்து நூல்களுக்கு உரை கேட்டுப் பயில்தல் மிகப் பழங்காலம் முதல் இருந்து வரும் வழக்கு என்பது இறையனாரகப் பொருளுரையைப் பற்றிச் சொல்லப்பட்டுள்ள வரலாற்றைக் கொண்டு அறிகின்றோம். இறையனார் அகப் பொருளுரை நீண்ட காலம் செவி வழக்கில் வந்த பின் ஒருவரால் எழுதி வைக்கப்பட்டது. திருக்குறளுரை அல்லது உரைகள் நீண்டகாலம் செவி வழக்கில் வந்திருக்கலாம். அவற்றைக் குறித்து ஒன்றும் அறியப்படவில்லை. பதினொன்று 12-ஆம் நூற்றாண்டுகளிலிருந்து தமிழ் மறுமலர்ச்சிக்குரிய பல தமிழ் நூல்கள் எழுதப்பட்டன. அக்காலத்திலேயே திருக்குறளுரைகளும் ஒன்றன்பின் ஒன்றாகப் பல தோன்றின. திருக்குறளுக்குப் பதின்மர் உரை எழுதினார்கள் என்பது பழைய பாடல் ஒன்றால் தெரியவருகிறது. இவற்றுள் பரிதி, காளிங்கர், பரிப்பெருமாள், மணக்குடவர் பரிமேலழகர் உரைகள் அச்சிடப்பட்டுள்ளன. இவற்றை நோக்கும்போது ஒன்றிலிருந்து ஒன்று வளர்ச்சியடைந்ததெனத் தோன்றுகின்றது. இவற்றுள் இறுதியானது பரிமேலழகருரை. பிற்காலத்தில் பரிமேலழகருரைக்கு விளக்கம் வேண்டியிருந்தமையால் திருக்குறள் நுண்பொருள்மாலை, இராமானுசருரை முதலியன தோன்றின.

உரைகளிற் பரிமேலழகருரையே சிறந்ததெ
எல்லாரும் ஒப்புக்கொள்கின்றனர். பொது நால
கவும் தமிழ் நாட்டு வழக்கைத் தழுவியும் செய்ய
பட்ட திருக்குறளுக்கு மிருதி வழக்கு, வருண
சிரமதருமம் முதலியவற்றைப் பின்பற்றிப் பரிமே
லழகர் சிற்சில இடங்களில் உரை எழுதியுள்ளா
அவ்வுரைப் பகுதிகள் திருக்குறட் கருத்துகளுக்கு
பொருத்தமில்லாதிருத்தலை இக்கால அறிஞ
எடுத்துக்காட்டியுள்ளனர். இதனுல் பரிமேலழ
கரின் பெருமைக்கோ அவர் உரைச் சிறப்புக்கே
இழுக்கு யாதும் இல்லை. உரை அக்காலச் சூழ்
நிலைக்கேற்ப எழுதப்பட்டது.

## திருக்குறளில் வடசொற்கள்

சமீப காலம் வரையில் தமிழ் மொழியை
பற்றிய வரலாறுகள் தெளிவுபடாமலிருந்தல
தமிழ் வட மொழியினின்று பிறந்தது, தமிழுக்கு
சமக்கிருதத்துக்கும் இலக்கணமொன்று, தமி
வடமொழியினுதவியின்றித் தனித்தியங்க மாட
டாது என்னும் கருத்துக்கள் இருந்து வந்தன
தமிழில் காணப்படும் ஒரு சொல் வடமொழியி
காணப்பட்டால் அல்லது வடமொழியிற் காண
படும் சொல் தமிழில் காணப்பட்டால் அச்சொ
வடமொழிக்குரியதெனக் கொள்ளப்பட்டது
இதற்குக் காரணம், சமக்கிருதம் பிறமொழிக
ளிலிருந்து சொற்களை இரவல் பெறவில்லை, அ

இந்தியாவில் வழங்கும் சமக்கிருதமும், பாரசீக வேதம் எழுதப் பட்டுள்ள பழைய பாரசீ மொழியும் ஐரோப்பிய நாடுகளில் வழங்கு ஆரிய மொழிகளும் பழைய ஒரு மொழியின் பிறந்தவை எனக் கொள்ளப்படுகின்றன. இ மொழிக் கூட்டங்கள் இந்து-ஐரோப்பியம் எனப் படும். சமக்கிருதமல்லாத மற்றைய இந்து-ஆரி மொழிகளில் காணப்படாத சொற்கள் சமக்கிரு தத்தில் காணப்பட்டால் அவை இந்திய உள்நாட் மொழிகளிலிருந்து சமக்கிருதம் இரவல்பெற்றன எனக் கொள்ளப்படுதல் வேண்டுமென ஆராய்ச் யாளர் கூறுவர். தமிழில் காணப்படும் சமக்கிரு

---

by other scholars — *non-Aryan elements in In Aryan, S. K. Chatterji — Journal of the grea India Society Vol. 3.*

Like Sanskrit, Greek, with all its entirely Inc European syntax and grammar, has a vast non-Inc European vocabulary. The reason was the same both cases. In both lands the invading Wirors ( the Indo-Europeans) found a previously existing n Aryan race with which they mingled, the Hindus v the Dravidians, the greeks with the Minoans, an both cases, while the language of the conqueror vailed, that of the conquered supplied innumer names and words to its vocabulary. In both coun the conquered race continued to exist side by with the conquerors, the dark Dasyus with the Aryans, the dark Minoans with the fairer He
*—Bronge age Greece p. 288 — Hall.*

மெனப்படும் சொற்களைச் சமக்கிருதமெனத் துணியுமுன் அவை மற்றைய இந்து-ஐரோப்பிய மொழிகளிலிருக்கின்றனவோ என்று ஆராய்ந்-தறிதல் வேண்டும். இவ்வகை ஆராய்ச்சி இன்னும் நடைபெறவில்லை. இவ்வாறு ஆராயப்படும் வரை சங்க இலக்கியங்கள், திருக்குறள், தொல்காப்-பியம் முதலிய நூல்களிற் காணப்படும் ஆரியம் எனப்படும் சொற்கள் தமிழ்ச் சொற்களாகவே கொள்ளப்படுதல் வேண்டும்.

பல ஆரியச் சொற்களுக்கும் திராவிடச் சொற்-களுக்கும் அடியங்கள் (roots) ஒன்ருகவிருக்-கின்றன வென்பதையும் மொழியாராய்ச்சிகாரர் காட்டியுள்ளனர். அவ்வாருயில் ஆரியமெனக்-கொள்ளப்படும் தமிழ்ச் சொற்களை ஆரியமெனத் துணிதல் மேலும் கடினமாகின்றது.

திருக்குறளில் வடசொற்களெனக் கொள்ளப்-பட்டு வருவன :—அவி, அந்தம், அமரர், அமிர்தம், அங்கணம், ஆகுலம், ஆசாரம், ஆதி, ஆயம், இந்திரன், இலக்கம், கருமம், கனம், காமம், காரணம், குணம், குலம், கோடி, சலம், சாதி, ஞானம், தண்டம், தவம், தானம், துலை, தெய்வம், தேயம், தேவர், நாகம், நாகரிகம், நாமம், பருவம், பாக்கியம், பாகம், பாவம், புரந்தரன், புருவம், [illegible]ம், மங்கலம், மந்திரி, மதி, மணி, மாத்திரை, [illegible]யம், மானம், முகம், முத்தம், யாமம், வித்தகர்

என்பன. இவற்றுள் பல தமிழ்ச் சொற்களே என எளிதில் அறியக் கிடக்கின்றன.

## திருக்குறளின் பகுதிகள் வடமொழி நூல்களிலிருந்து எடுக்கப்பட்டனவா?

திருக்குறளின் சில பகுதிகள் அர்த்த சாத்திரம் மனுமிருதி, பகவத்கீதை முதலிய வடமொழி நூல்களிலிருந்து எடுக்கப் பட்டுள்ள தமிழ் மொழி பெயர்ப்புகளாகக் காணப்படுகின்றனவெனச் சிலர் எடுத்துக் காட்டியுள்ளனர்.

இப்பொழுது அர்த்த சாத்திரமென வழங்குவது கௌடலியரால் செய்யப்பட்ட நூலன்று எனவும் அது கௌடலியரின் நூலைத் தழுவிப் பிற்காலத்து எவராலோ செய்யப்பட்ட நூலெனவும் கருத்துக் களிருந்து வருகின்றன. [2]இது கி. பி. 300 வரையில் செய்யப்பட்டதெனவும் காலத்துக்குக் காலம் பின்சேர்ப்புகள் நடந்தனவெனவும் ஆராய்ச்சியாளர் கூறுவர். திருக்குறளுக்குப் பின் செய்யப்பட்ட ஒரு நூலிலிருந்து திருவள்ளுவர் சில வரிகளை மொழியெர்த்துத் தமது நூலிற் சேர்த்தார் எனக்கூறுவது சிறிதும் பொருத்தமாகத் தோன்றவில்லை. [3]மனுநூல் கி. பி. 100-க்கு

---

[2] According to this view, therefore, the *artha sastra* was composed much later than the time of Chandragupta Maurya and may even be as late as A.D. 300 — *The History and Culture of Indian People, Vol. II, p. 275.*

300-க்கும் இடையில் செய்யப்பட்டதெனவும் இது பல முறை புதியன பல சேர்த்து எழுதப்பட்டதெனவும் ஆராய்ச்சியாளர் கூறியிருக்கின்றனர். ஆகவே மனு நூலில் திருக்குறளிலிருந்து சில பகுதிகள் எடுத்துச் சேர்க்கப்பட்டன என்பது மிகப் பொருத்தமாகிறது. பகவத்கீதை பாரதப் போரின்போது செய்யப்பட்டதெனப் ப்ட்டாலும் இன்றைய வடிவிலுள்ள நூல் கி. மு. 200-க்கும் கி. பி. 200-க்கும் மிடையில் செய்யப்பட்டதெனச் சில ஆராய்ச்சி அறிஞர் கருதுகின்றனர். பிற்காலங்களில் பழைய ஆசிரியர்கள் பெயர்களைக் கொடுத்துப் புதிய நூல்கள் பல செய்யப்பட்டன. எடுத்துக் காட்டாக யாக்ஞவல்கியம், நாரதம், பிரகஸ்பதி, காத்தியாயனம் முதலிய மிருதிகள் கி. பி. 4-ஆம் நூற்றூண்டுக்கும் 7-ஆம் நூற்றூண்டுக்குமிடையில் செய்யப்பட்டவை எனக் கொள்ளப்படுகின்றன. பெரும்பாலும் வடமொழி நூல்களை இயற்றி அம்மொழியை வளம் படுத்தியவர்கள் தென்னாட்டினராகக் காணப்படுகின்றனர்[4].

---

[3] It is now generally agreed that the text (Manusmiriti) was formulated some time between 200 B.C. and A.D. 200. It was possibly revised several times — *The History and Culture of Indian People, Vol. II, p. 256.*

[4] Katyayana, the grammarian, Baudhayana the smiriti writer, and possibly Apastamba also were South Indians but we do not know to which part of

அவர்களே அரிய திருக்குறட் கருத்துக்களை வடமொழி நூல்களில் புகுத்தினார்கள் எனக்கொள்வது சாலப் பொருத்தமாகிறது.

## திருவள்ளுவமாலை

திருக்குறளைப் பற்றிப் புகழ்ந்து பாடப்பட்டுள்ள 53 பாடல்கள் திருவள்ளுவமாலை என வழங்குகின்றன. ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு புலவரால் செய்யப்பட்டதாகக் காணப்படுகின்றது. திருக்குறள் அரங்கேற்றப்பட்ட காலத்தில் இப்பாடல்கள் பாடப்பட்டனவாக ஐதீகம் இருந்து வருகின்றது. திருவள்ளுவமாலையைக் குறித்துப் பலர் ஆராய்ச்சி செய்துள்ளனர். கி. பி. 10-ஆம் நூற்றூண்டில் வாழ்ந்த புலவரொருவர் இப்பாடல்களைச் செய்து இவற்றுக்குத் திருவள்ளுவமாலையெனப் பெயரிட்டு, ஒவ்வொரு பாடலையும் செய்தவராக ஒவ்வொரு புலவர் பெயரைக் குறிப்பிட்டுள்ளார் என்பது அறிஞர்களின் கருத்தாக இருந்து வருகின்றது.

## திருக்குறள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்

திக்குறள் பதினெண் கீழ்க்கணக்கு என்னுந் தொகையைச் சேர்ந்த நூல். இத் தொகையை சேர்ந்த நூல்கள் எல்லாம் ஒரு காலத்தனவல்ல நாலடியார் கி. பி. 7-ஆம் அல்லது 8-ஆம் நூ

South India they belonged — *Malayalam and oth Languages, p. 1249.*

றுண்டிற் செய்யப்பட்ட நூலெனத் துணியப் படுகின்றது. இத்தொகுப்பிலுள்ள நூல்களெல்லாம் சங்க காலத்தனவெனக் கருதிய ஒரு புலவர் பதினெண் கீழ்க்கணக்கு என்னும் தொகுப்பை 8-ஆம் நூற்றுண்டுக்குப் பின் செய்தாரெனத் தெரிகின்றது.

## திருக்குறளுக்கு வழங்கும் பெயர்கள்

முப்பால், பொய்யாமொழி, வாயுறை வாழ்த்து, உத்தர வேதம், தெய்வ நூல், திருவள்ளுவர், தமிழ் மறை, பொதுமறை, திருவள்ளுவப்பயன், பொருளுரை, முதுமொழி, அறம்.

## திருவள்ளுவரைக் குறிக்க வழங்கும் பெயர்கள்

தேவர், தெய்வப்புலவர், பொய்யில் புலவர், முதற்பாவலர், பெருநாவலர், மாதாநுபங்கி, செந்நாப் போதார், நாயனர், நான்முகனர், புலவர்.

## திருக்குறளில் வீடு கூறுமைக்குக் காரணம்

[illegible] வீட்டு நெறியைப் பற்றிய உண்மை ஞானங்கள் ய[illegible]ரிய மாணுக்க முறையில் பண்டைக்காலம் இ[illegible]ல் உபதேசிக்கப்பட்டு வந்தன. இவை மறை ப[illegible]சியம்) எனப்பட்டன. இவற்றுக்கு உப-[illegible]ம் என்னும் பெயரும் வழங்கும். உபநிடத[illegible]பதற்குக்கிட்ட இருந்து கேட்பது என்பது [illegible]ள். உபநிடதங்கள் பக்குவம்வாய்ந்த மாண-

வனுக்கு ஆசிரியன் உபதேசிக்கும் ஞானங்கள் வீட்டு நெறி பற்றி நூல் செய்வது பண்டைய மர பன்றெனத் தொல்காப்பியங் கூறுகின்றது இம்மரபு பற்றியே திருவள்ளுவர் வீட்டு நெறியைத் தனியாகக் கூறவில்லை.

## திருக்குறளின் சிறப்புணர்த்தும் ஆன்றோர் செய்யுட்கள் சில

" வள்ளுவர்சீர் அன்பர்மொழி
வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகன்
செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம்
தொகுசித்தி ஓராறும்
தண்டமிழில் மேலாந் தரம் "
(உமாபதி சிவாசாரியார்)

" திருத்தக்க மாமுனிசிந்
தாமணி கம்பர்
விருத்தக் கவித்திறமும்
வேண்டேம்—உருத்தக்க
கொங்குவேள் மாக்கதையைக்
கூறேம் குறளனுகேம்
எங்கெழிலென் ஞாயி றெமக்கு "

" தேவர் குறளும்
திருநான் மறை முடிவும்
மூவர் தமிழும்
முனிமொழியும்—கோவை
திருவா சகமும்
திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர் " (ஔவை